

**சிறுசேமிப்புத்துறை**

# சேமிப்பின் மூலம் பிரமிக்கத்தக்க பரிசுகள்!

**சிறுசேமிப்பில் முதலீடு–**
**வருமானவரியிலிருந்து**
**பாதுகாப்பு!**

குறிப்பிட்ட அளவு
பரிசுக் கூப்பன்களே
உள்ளன.

**பரிசுப் பொருட்களின் விவரம்:**

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் பரிசு | - காண்டஸா கார் |
| 1 முதல் பரிசு | - மாருதி கார் |
| 5 இரண்டாவது பரிசுகள் | - ஹீரோ ஹோண்டா மோட்டார் சைக்கிள் |
| 10 மூன்றாவது பரிசுகள் | - கலர் டிவி |
| 20 நான்காவது பரிசுகள் | - 165 லிட்டர் ரெப்ரிஜிரேட்டர் |
| 100 ஐந்தாவது பரிசுகள் | - 7½ லிட்டர் பிரஷர் குக்கர் |
| 500 ஆறுதல் பரிசுகள் | - குவார்ட்ஸ் சுவர் கடிகாரம் |

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்பு திட்டக் கணக்கு-1987
- பொது சேமநலநிதி
- இந்திரா சேமிப்பு பத்திரம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
- மாதாந்திர வருமானத் திட்டம்
- அஞ்சலக குறித்தகால முதலீடு

மேற்கண்ட சிறுசேமிப்புத் திட்டங்களில் ரூ.1000/- முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கும் வட்டியுடன் இலவச பரிசுக் கூப்பனை பெற்றிடுங்கள். இத்திட்டத்தில் எல்லா தனிநபர்களும் முதலீடு செய்யலாம்.

## தேசிய சேமிப்பு திட்டக்கணக்கு-87ல் ரூ.30,000/- வரை முதலீடு செய்து




## வருமான வரி விலக்கு பெறலாம்.

வருமான வரிச்சட்டம் 80CCA பிரிவின் கீழ் முதலீட்டிற்கு 100% வரிச்சலுகை. இந்த வரிச்சலுகை 80C பிரிவின் கீழ் கிடைக்கும் வரிச்சலுகையுடன் சேர்த்தும் பெறலாம்.

**இயக்குநர், சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209/840003.

அணுகவும்:
- அனைத்து அஞ்சலகங்கள்
- ஆட்சியர் அலுவலகங்கள்
- வட்டாட்சியர் அலுவலகங்கள்
- ஊரக வளர்ச்சித்துறை அலுவலகங்கள்.

DIPR/MS/90/ARIES

# தேவிலால் கேட்ட கேள்வி!

●● பிரதமர் வி. பி. சிங்கின் செயல் முறை பலருக்குத் திருப்தி அளிக்கிறது என்று கேள்வி — காங்கிரஸ் பெருந்தலைகள் உட்பட! அமைச்சர்களுக்கு எல்லாம் அவரவர் இலாக்காவைச் சுதந்திரத்துடன் நடத்த உரிமை கொடுத்திருப்பது மட்டுமல்ல, அனாவசியக் குறுக்கீடுகளும் செய்வதில்லையாம். இ. காங்கிரஸ்காரர்கள் இதைப் பார்த்து. 'என்ன இருந்தாலும் அவர் நம்மவர். இவர் ஏன் பிஜேபி இடதுசாரிகள் தயவில் காலம் தள்ள வேண்டும்?' என்று அங்கலாய்த்தார்களாம். ராஜீவ் காதிலும் இதெல்லாம் விழுந்து கொண்டுதான் இருக்கிறதாம்.

●● தேவிலால் இல்லாமல் தலைநகர்ச் செய்திகளா? லேட்டஸ்ட்: கரன்சிங்குக்குப் பதிலாக எம். பி. யான தமது மருமகனை, வாஷிங்டனில் இந்தியத் தூதராக நியமித்தால் என்ன குறைந்துவிடும் என்று 'தாவ்' கேட்டாராம்! 'தாவ்' ரொம்பத்தான் தாவுகிறார்!

●● சந்திரசேகரின் நிலை என்ன? சற்று குழப்பமான கேள்விதான். பிரதமர் தேர்தலில் தம் காலை வாரிவிட்டதை இன்னும் மறக்காமல் கறுவிக் கொண்டுதான் இருக்கிறாராம். இடையில் ராஜீவ் காந்தியைத் தனியாகச் சந்தித்துப் பேசினாராம். (அருண் நேருவும் கூடச் சந்தித்ததாகச் செய்தி. 'நேரு குடும்பப் பிணைப்பு விட்டுப் போய்விடக் கூடாது' என்றாராம் ராஜீவ்!) அருண் நேரு மறுத்திருக்கிறார்; ஆனால் வலுவில்லை!

●● விமானப் போக்குவரத்துத் துறை அமைச்சர் ஆரிஃப் முகமது கான், தமது துறை ஒரு மாதிரி சரியாகிக் கொண்டு வருகிறது என்று நிம்மதிப் பெருமூச்சு விட்ட நேரத்தில், பெங்களூர் விபத்து வந்து. ஏர்லைன்ஸ் தலைவர் பிரசாத் ராஜிநாமா செய்தார். அவரது ராஜிநாமா கேட்டுப் பெறப்பட்டதா, அல்லது அவராக ராஜிநாமா செய்தாரா என்பதுதான் கேள்வி. முன்னதாக இருக்கும் பட்சத்தில், நிலைமை அப்படி ஒன்றும் சீராகி விடாது என்கிறார்கள்.

●● மகாபாரதத்துக்கும் பெப்சிகோலாவுக்கும் என்ன சம்பந்தம்? இருக்கிறது. இனி மகாபாரதம் தொடருக்கு முன்னால் பெப்சி உணவுப் பண்டங்களின் விளம்பரங்கள் கட்டாயம் இடம்பெற வேண்டும் என்று பெப்சி தீர்மானித்திருக்கிறதாம்.

●● காஷ்மீர் தீவிரவாதிகள், தங்கள் குழுவில் சேரும் இளைஞர்களுக்கு எல்லாம் தாராளமாக மெட்ரிகுலேஷன் சான்றிதழ் கொடுக்கிறார்களாம். போலீஸ் தேடலில் தீவிரவாதிகளின் இருப்பிடங்களில் நிறைய வெற்று சர்ட்டிபிகேட்டுகள் கிடைத்ததாம். கொடுப்பதுதான் கொடுக்கிறார்கள், மெட்ரிகுலேஷன் சான்றிதழ் ஏன்? டிகிரி சர்ட்டிபிகேட் கொடுக்கக் கூடாதா என்று சிலர் கேட்கிறார்களாம்!

தொகுப்பு: சித்தார்த்

* வி. பி. சிங்

* சந்திரசேகர்

* அருண் நேரு

* ஆரிஃப் முகமதுகான்

* ராஜீவ்

* தேவிலால்

# விடுதலைப் புலிகளிடம் ஆயுதப் பறிப்பு நடத்தியது எப்படி?



**'எம். ஜி. ஆர். இவர் சொல்கிறபடிதான் எல்லாவற்றையும் செய்வார்' என்று சொல்வதுண்டு — உயர் போலீஸ் அதிகாரியான மோகன் தாஸைப் பற்றி. சர்ச்சைக்குரிய மனிதராய்க் கருதப்பட்ட மோகன் தாஸ், அண்மையில் ஓய்வு பெற்றார். பதவியிலிருந்த போது பேச முடியாதவற்றையெல்லாம் இப்போது நம்மிடம் பேசினார். அதன் சுருக்கம்தான் இது:**

**OO** திருமணமான அந்தப் பெண்மணி, காணாமற் போய், ஒரு மாதம் வரை என்ன ஆனாள் என்றே தெரியவில்லை. ஒரு நாள் காவிரிக் கரையில், மண்டையோடு இல்லாத ஓர் எலும்புக் கூடு மட்டும் கண்டுபிடிக்கப் பட்டது. அதைத் தடய அறிவியல் ஆய்வகத்துக்கு அனுப்பிப் பரிசோதித்ததில், காணாமற்போன பெண்மணிதான் என ஊர்ஜிதமாயிற்று. கொலையாளி யார் எனப் புலன் விசாரணை தொடங்கியது. உண்மையை அறிந்த போது, எங்களுக்கே அதிர்ச்சியாய் இருந்தது. கொலையாளி கொலை செய்யப்பட்ட பெண்மணியின் கணவன்தான். புதிதாய் மணமானவுடன், கணவன் வேலை பார்க்கும் பண்ணையின் மிராசுதார், தன் ஆசைக்கு இணங்கச் சொன்ன போது அவள் மறுத்து விட்டாள். ஆத்திரமடைந்த மனைவியிடம், 'இதெல்லாம் வழக்கம்தான்' எனக் கணவன் கூறி இருக்கிறான். மிராசுதார், தன் வேலையாளான அவள் கணவனை பிரெயின் வாஷ் செய்து, 'எனக்குப் பயனாகாத அவளை நீயே கொன்று விடு; உனக்கு நானே வேறு திருமணம் செய்து வைக்கிறேன்' என்று கூறவே, அவனும் தன் மனைவியைக் கொன்று விட்டான். நான், பண்ணையாள், மிராசுதார் இருவர் மீதும் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்தேன். அரசியல் ரீதியாகப் பலம் பொருந்திய அந்த மிராசுதார் கேஸை ஒன்றுமில்லாமல் செய்து விடப் பலவிதங்களில் முயன்றார். செஷன்ஸ் கோர்ட்டில் இருவருக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது. ஆனால் கேஸ் ஹைகோர்ட்டுக்குப் போன போது, மிராசுதார் விடுதலை செய்யப்பட்டு விட்டார். இதுதான் நான் 1956ல் திருச்சியில் உதவி கண்காணிப்பாளராகப் பதவி ஏற்றபின் விசாரித்த முதல் கேஸ்.

**OO** தூத்துக்குடி கொம்பன் கேஸ் மிகப் பிரபலமானது. தூத்துக்குடியில் ஒரு வட்டாரம் ரௌடியிசத்துக்குப் பெயர் போனது. ஒரு தகராறில் கணவன் மனைவி குழந்தைகள் என அரை டஜன் கொலை நடந்தது, ஊரையே உலுக்கிக் கொண்டிருந்தது. நான் தூத்துக்குடியில் பொறுப்பெற்ற போது, முதல் நெம்பர் ரௌடி கொம்பன். ஏழெட்டுக் கொலைகளில் அவனுக்கு நேரடிப் பங்கு உண்டு என்றாலும் கூட, அவனைப் போலீஸ் கைது செய்ததோ, லாக் அப்பில் வைத்ததோ இல்லை. அந்த அளவுக்குக் கில்லாடி அவன். அவன் கொட்டம் அளவுக்கு அதிகமாய்ப் போய் விட்ட நிலையில், அவனைப் பிடிக்கத்தக்க தருணத்துக்காகக் காத்துக் கொண்டிருந்தேன். தருணமும் வந்தது. மிக சாமர்த்தியமாய் அதைப் பயன்படுத்திக் கொண்டேன். கொம்பனுக்கு ஏழாண்டு ஜெயில் தண்டனை கிடைத்தது. தூத்துக்குடி மக்கள் நிம்மதிப் பெருமூச்சு விட்டனர். என்னைப் பாராட்டினர்.

**OO** 66ம் ஆண்டு நடந்த இன்னொரு சம்பவம். ஒரு கொலை கேஸில், நான்கு பேர் மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டிருந்தது. ஆனால் மூன்றாம், நான்காம் நபர்கள் தங்களுக்கும், கொலைக்கும் துளியும் சம்பந்தமே இல்லை என்று சொன்னார்கள். ஆனால் எஃப். ஐ. ஆரில், நான்கு பேர் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. நான் விசாரணையைத்துவக்கினேன். முதலிரண்டு பேர்களும்தான் கொலையுடன் சம்பந்தப்பட்டவர்கள் என்றும், வேறு விஷயங்களில் சில விரோதங்கள் காரணமாய்ப் பழிவாங்கும் நோக்கத்துடன் மற்ற இருவர் பெயர்களும் சேர்க்கப்பட்டிருப்பதையும் கண்டுபிடித்தேன். ஆனால், ஒரு வழக்கில்

எஃப். ஐ. ஆர். தான் வேதம் போல. அதை மாற்றுவது சட்டவிரோதமானது. ஆனாலும் கோர்ட்டில், முதலிருவரும் கொலையாளி கள் என்று நிரூபித்ததோடல்லாமல், மற்ற இருவரும் நிரபராதிகள் என்றும் நிரூபித்ததை, நீதிபதியே பாராட்டினார்.

00 வட ஆற்காடு, தர்மபுரி பகுதியில் நக்சலைட்டுகளை ஒடுக்க நடவடிக்கைகள் எடுத்த நாட்கள் குறிப்பிடத்தக்கவை. நக்சலைட் இயக்கத்தில் இருந்தவர்கள் இளைஞர்கள்; படித்தவர்கள். அவர்கள் பேசிப் பேசியே மற்றவர் மனங்களை மாற்றித் தங்கள் தத்துவங்களை ஏற்கச் செய்து விடுவார்கள். ஒருமுறை பிடிபட்ட நக்சலைட் ஒருவரை விசாரித்த போலீஸ்காரர் ஒருவர், "அந்த நக்சலைட் சொல்வதெல்லாம் ரொம்ப நியாயம்தான்" என்றார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

00 நான் சி. பி. ஐ. யில் பணிபுரிந்த நாட்களில் எனக்கு ஏற்பட்ட அனுபவங்கள் மறக்க முடியாதவை. அப்போது, சி. பி. ஐ. க்குத் தனி மரியாதை இருந்தது. இப்போது போல அரசியல் தலையீடுகள் கிடையாது. எல்லாத் தரப்பினரிடமும் சி. பி. ஐ. என்றால் ஒருவித பயம் இருந்தது. நான் பல அரசியல்வாதிகள், அரசு அதிகாரிகள், நீதிபதிகள் என பலதரப்பட்டவர்கள் மீது வந்த புகார்களையும் விசாரித்திருக்கிறேன். நான் குற்ற விசாரணை செய்த புள்ளியே, மீண்டும் கவர்னராய் நியமிக்கப்பட்டிருக்கிறார். நான் விசாரித்துக் குற்றச்சாட்டுகளை நிரூபித்ததன் காரணமாய் இரண்டு முக்கிய மந்திரிகள் பதவி விலகியிருக்கிறார்கள். உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவரின் தம்பி சஷ்டியப்த பூர்த்தி கொண்டாடிய விஷயம் கிளப்பிய சந்தேகத்தின் பேரில், விசாரணை நடத்தியதில், நீதிபதி பொய்யான வயது

* கல்லூரி நாடகத்தில் போலீஸ் வேஷம்.





* மீசை இல்லாத மோகன்தாஸ் இடது கோடி (மதுரையில் எஸ். பி.)

கொடுத்திருப்பது தெரிய வந்தது. அவர் பின், தாமாகவே பதவியிலிருந்து ஓய்வு பெற்றுக் கொண்டு விட்டார். இப்படி எத்தனை எத்தனையோ சுவாரசியமான சம்பவங்கள்.

00 ரொம்பப் பேர் விவரம் தெரியாமல் நான் எம். ஜி. ஆருக்கு மிகவும் நெருக்கம் என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். என்னை அவர் இன்டலிஜென்ஸ் பீரோவின் தலைமைப் பொறுப்பேற்கச் செய்தார். மற்ற எவரையும் விட, ஐ. பி. தலைவருக்கும், முதலமைச்சருக்கும் நெருக்கமான தொடர்பு இருக்கவே செய்யும்; இருந்தாக வேண்டும். இருபத்து நான்கு மணி நேரமும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டிய பதவி அது. மாநிலம் முழுவதும் என்ன நடக்கிறது என்று தெரிவிப்பது மட்டுமின்றி, அடுத்து என்ன நடக்கவிருக்கிறது, அதன் விளைவுகள் என்ன என்பதையும் அலசிப் பார்த்துத் தெரிவிக்க வேண்டிய கடமையும் உண்டு. நான் இதற்காக, ஐ. பி. யின் செட் அப்பில் சில புதுமையான மாற்றங்களைச் செய்தேன். தகவல் தொடர்பு நெட் ஒர்க்கை விரிவுபடுத்தினேன். இது தவிர, டெலிபோன் துறையின் ஸ்பெஷல் அனுமதியுடன், ஐ. பி. க்கென்று ஒரு தனி கண்ட்ரோல் ரூம்—மற்ற நகரங்களிலிருந்து நேரடி எஸ். டி. டி. வசதி போன்றவற்றைச் செய்தேன். பல புதுமைகள் கொண்ட இந்த நெட் ஒர்க் இந்தியாவிலேயே தமிழகத்தில் மட்டுமே இருக்கிறது. முதலமைச்சருக்கு இரவு ஏழு மணிக்குத் தினசரி நிலவர அறிக்கை அனுப்புவது வழக்கம். நான் ஐ. பி. தலைமைப் பொறுப்பேற்றதும், அந்த அறிக்கை தவிர, புலடின் சிஸ்டம் என்று ஒன்றை அறிமுகப்படுத்தினேன். அதன்படி, காலை ஏழு மணிக்கு எம். ஜி. ஆருக்கு அரசியல், சட்டம் ஒழுங்கு மற்றும் பல்வேறு விஷயங்கள் குறித்த செய்தி அறிக்கை டெலிபோன் மூலம் நேரடியாய்த்

தெரிவிக்கப்படும். அதேபோல் பகல் ஒரு மணிக்கு ஒரு புலடின். இரவு ஏழு மணிக்கு ஒன்று. இதை எம். ஜி. ஆர். மிகவும் பாராட்டினார். தனிப்பட்ட நெருக்கம் ஏதும் இல்லை.

OO எல். டி. டி. ஈ. இயக்கத்தினர், ஆயுதங்களை முறை தவறித் தமிழ் நாட்டில் பயன்படுத்திக் கொண்டிருந்தார்கள். வேதாரண்யத்தில், சென்னையில் — சிற்சில சம்பவங்கள். மத்திய அரசு, போராளிகளின் ஆயுதங்களைக் களைய வேண்டுமென முடிவெடுத்தாலும், நேரடியாய்ச் செயல்படுத்த விரும்பவில்லை. எம். ஜி. ஆரிடம் இக் காரியத்தைச் செய்யச் சொல்லி விட்டு விட்டார்கள். 'விடுதலைப் புலிகளிடமிருந்து ஆயுதங்களைப் பிடுங்கிடுங்க' என்றார் எம்.ஜி.ஆர். 'அது இயலாத காரியம்' என்று நான் சொன்ன போது, 'எப்படியாவது செய்தாகனும்' என்றார். 'உயிர்ச் சேதம் நிறைய ஆகுமே!' என்றேன். 'பரவாயில்லை. நான் மத்திய அரசுக்கு வாக்குக் கொடுத்து விட்டேன்' என்றார்.

நான் ஆயுதப் பறிப்பைச் செயல்படுத்தும் விதம் பற்றித் தீவிரமாய் யோசித்தேன். காரணம் இது அயலுறவு, மத்திய மாநில உறவு, உள்நாட்டுப் பாதுகாப்பு, அரசியல் என்று பல விவகாரங்கள் இணைந்த சிக்கலான பிரச்னை. இறுதியில் ஆயுதப் பறிப்புக்கு நாள் குறித்தேன். ஆயுதப் பறிப்பு ரொம்ப ரொம்ப ரகசியமாய்ச் செயல்படுத்த வேண்டிய விஷயம். எனவே முதலமைச்சருக்குக் கூட ஆயுதப் பறிப்பு செய்யப் போகிறேன் என்றுதான் சொன்னேனேயொழிய, என்றைக்கு என்று தேதி கூறவில்லை.

நான் ஸ்பெஷலாக உருவாக்கியிருந்த கமாண்டோக்களின் உதவியுடன் இதைப் படு ரகசியமாய்ச் செய்யத் திட்டமிட்டேன். போராளி முகாம்கள் எங்கெங்கே இருக்கின்றன, அவற்றிலுள்ள போராளிகள், ஆயுத விவரங்கள் எல்லாம் ஏற்கெனவே என்னிடம் இருந்தன. குறிப்பிட்ட தினத்தில், ஒவ்வொரு போராளி முகாமிற்கும் ஒவ்வொரு கமாண்டோ போய், அறிமுகப்படுத்திக் கொண்டு, 'சமீப காலமாய்ப் போராளிகள் ஆயுதமேந்திக் கொண்டு தமிழகத்தில் திரிவது மக்களிடையே அதிருப்தியை ஏற்படுத்தியுள்ளது. எனவே, இன்னும் ஒரு வாரத்துக்காவது ஆயுதங்களைக் கையிலெடுக்காமல் நீங்கள் இருக்க வேண்டும் என அரசாங்கம் நினைக்கிறது' என்று முகாமின் பொறுப்பாளரிடம் தெரிவித்த போது, அவர்களும் ஒப்புக் கொண்டார்கள். தொடர்ந்து, 'உங்கள் ஆயுதங்கள் அனைத்தையும், முகாமிலேயே ஓர் அறையில் போட்டுப் பூட்டிச் சாவியை நீங்களே வைத்துக் கொண்டால் போதும்' என்றதும், அப்படியே செய்தார்கள். இப்படி ஒவ்வொரு முகாமிலும், ஆயுதங்கள், பூட்டிய அறைகளுள் முடக்கப்பட, போராளிகள் நிராயுதபாணிகளானார்கள். கமாண்டோ நன்றி தெரிவித்துத் திரும்பிய அடுத்த அரை மணியில் நவீன ஆயுதங்கள் தாங்கிய ஏழெட்டுக் கமாண்டோக்கள் படை, அதிரடியாகப் போய்ச் சில நிமிடங்களில் பூட்டைத் தகர்த்து ஆயுதங்கள் அனைத்தையும் அள்ளிப் போட்டுக் கொண்டு வந்து விட்டது. அதிர்ச்சியிலிருந்து மீண்டு, என்ன நடக்கிறது என போராளிகள் அறிந்து கொள்ளுமுன்பே எல்லாம் முடிந்து விட்டது. ஆயுதமேந்திய கமாண்டோக்களை மீறி நிராயுதபாணிகளான போராளிகளால் ஒன்றும் செய்ய முடியவில்லை!

அப்போது எம். ஜி. ஆர். டெல்லியில் இருந்தார். விவரம் சொன்ன போது, 'சாவு ரொம்பவுமா?' என்றார். 'ஒருவர் கூட உயிரிழக்கவில்லை' என்றதும், அசந்து போனார்!

OO அரசாங்க அதிகாரிகளிடையே போட்டியும் பொறாமையும் சகஜம். நான் எம். ஜி. ஆருக்கு மிக நெருக்கமானவனாய் இருக்க நேர்ந்தது, பலருடைய பொறாமையைச் சம்பாதித்துக் கொடுத்தது. நான் என் மகளின் திருமணத்துக்காக, ஒரு மாத லீவில் கேரளா போயிருந்த போது, 'கர்ட்டஸி'க்காக அப்போதைய கேரள முதல்வர் கருணாகரனைச் சந்தித்தேன். இரண்டு நிமிட சந்திப்புத்தான் அது என்றாலும், இந்தியன் எக்ஸ்பிரஸ் அதை அரைமணி நேரம் நடந்த உரையாடல் என்று செய்தி வெளியிட்டு விட்டது. என்னை எப்படியாவது சங்கடத்தில் மாட்டி விட வேண்டும் எனச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தவர்கள், எம். ஜி. ஆரிடம், நான் அவரைப் பற்றிய ரகசியங்களைக் கருணாகரனுக்குச் சொல்ல, அவர் ராஜீவ் காந்திக்குச் சொல்லி, ராஜீவ் காந்தி எம். ஜி. ஆர். மீது நடவடிக்கை எடுக்க வழி செய்திருப்பதாய்ச் சொல்லி விட, அவரும் நம்பி விட்டார். திருமணத்துக்குப் பத்து நாட்கள் இருக்கும் டென்ஷனான சமயத்தில், லீவிலிருந்து, மீண்டும் பணிக்கு வருமாறு உத்தரவிடப்பட்டது. எமர்ஜென்ஸி நேரங்களில், விடுமுறையில் சென்ற அதிகாரியை மீண்டும் பணிக்கு அழைப்பது சரியே! ஆனால் என்னை மீண்டும் அழைத்தது, பழைய பதவியில் தொடர விடாமல், ஒரு பொம்மை பதவியில் அமர்த்தப்படுவதற்காகத்தான். இது என்னை மனத்தளவில் மிகவும் பாதித்தது. நான் உதாசீனப்படுத்தப் பட்டதாய்க் கருதினேன்; ராஜினாமா கடிதம் கொடுத்தேன். ஆனால் அதைப் பின்னர் வாபஸ் பெற்றுக் கொண்டேன்.

சந்திப்பு: எஸ். சந்திரமௌலி

# வருமானவரி இல்லையென்றால் கருப்புப் பணம் இருக்காதா?



• சி. டி. குரியன்

**ப**ம்பாயிலிருந்து கே. வி. சத்திய மூர்த்தி என்பவர் 'இந்து' பத்திரிகைக்கு, ஆசிரியருக்குக் கடிதங்கள் பகுதியில் எழுதியிருந்தார்.

'திரட்டப்படும் வருமான வரி, — அதை வசூலிக்க ஆகும் நிர்வாகச் செலவுக்கே சரியாகப் போய்விடுகிறது. வருமான வரி இல்லாத பட்சத்தில் அத்தனை கறுப்புப் பணமும் வெளியே வந்து விடும். அதனால் இணையான பொருளாதாரம் என்ற பேச்சுக்கே இடமிருக்காது. பெரும் தொழிலதிபர்களின் பணம் வெளிநாட்டுக்குச் செல்லாது; ஃப்ளாட்டுகளும், மனைகளும், கட்டடங்களும் சரியாக விலை கணிக்கப் பட்டுவிட்டால், காபிடல் கெய்ன்ஸ் டாக்சுக்கே தேவையிருக்காது. மாதச் சம்பளக்காரர்களும், சிறு வியாபாரிகளும் நிம்மதிப் பெருமூச்சு விடுவார்கள். செக் மூலமாகவே கொடுக்கல் — வாங்கல் செய்வார்கள்' என்றெல்லாம் தமது கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறார் அவர்.

**இ**தைப் படித்ததும், இவையெல்லாம் சாத்தியம்தானா? நடக்கக் கூடியதுதானா? என்று மெட்ராஸ் இன்ஸ்டிட்யூட் ஆஃப் டெவலப்மெண்ட் ஸ்டடீஸ் என்ற அமைப்பில் பணியாற்றும் பொருளாதாரப் பேராசிரியர் டாக்டர் சி. டி. குரியன் அவர்களைக் கேட்டோம்:

''இது நடைமுறைக்குச் சாத்தியமானதே அல்ல'' என்று ஒவ்வொரு கட்டமாக விளக்க ஆரம்பித்தார் டாக்டர் குரியன். ''முதலாவதாக, இதற்குப் பதில், அரசுக்கு வருமானம் தரக் கூடிய வழிவகை என்ன என்று அவர் சொல்லவில்லை. வருமான வரியும் கம்பெனிகள் டாக்சும் அரசுக்குக் கணிசமான வருவாய் தரக் கூடிய அம்சங்கள். இவை எல்லாம் வந்து கொண்டிருக்கும் போதே, அரசு நிதிப் பற்றாக் குறையால் திணறுகிறது.

''கடுமையாகவும் அல்லாமல், மாற்றாகவும் அமைகிற நேர்முக வரி எதையேனும் அவர் தெரிவித்திருக்க வேண்டும். ஏனென்றால் வருமான வரி, நேர்முக வரிகளில் முக்கிய பங்கு வகிக்கிறது.

''வருமான வரியையே விட்டுவிடுவது என்றால், மறைமுக வரிகளைச் சேர்ந்த எக்சைஸ், கஸ்டம்ஸ் வரிகளைத்தான் கூட்ட வேண்டி வரும். அவை இறுதியில் யார் தலையில் வந்து விழுகின்றன? பொது மக்கள் மீதுதானே?

''மனைகள், சொத்துக்கள் விற்பனையில் கேபிடல் கெய்ன்ஸ் டாக்சையே எடுத்துவிட வேண்டும் என்பது கொஞ்சம் அபத்தமானது. மனைகளோ, சொத்துக்களோ வைத்திருக்கும் நபர், தமது சொந்த முயற்சி எதுவும் இல்லாமல், சமுதாய இயக்கம் (சோஷியல் பிராசஸ்) காரணமாக, கூடும் விலை மதிப்பை அனுபவிக்க அனுமதிப்பது சரியானதா? உதாரணமாக, இரண்டு வருடங்கள் முன்பு மூன்று லட்ச ரூபாய் விலைக்கு ஒரு வீட்டை வாங்கி, நாலைந்து வருடங்கள் கழித்து ஐந்து லட்ச ரூபாய்க்கு விற்கும்போது, அவருக்குக் கிடைக்கும் இரண்டு லட்ச ரூபாய்க்கு வரி விதிக்கக் கூடாது என்பது எப்படி நியாயமாகும்? இந்த அதிகபட்ச வருவாய்க்குத் தாம் துளியும் பிரயாசைப்படாத, இரண்டு சதவிகிதத்துக்கும் குறைவான இந்தப் பகுதியினருக்காக, கேபிடல் கெய்ன்ஸ் வரியையே எடுத்துவிட எந்தச் சமூகத்திலும் நியாயமிருக்காது.

''இந்தியா வளர்ந்து வரும் நாடு. அமெரிக்கா, ஜப்பான் போன்ற வளர்ந்துவிட்ட நாடுகளில் கூட வருமான வரி வசூலிக்கப் பட்டுத்தான் வருகிறது. அங்கேயும் கறுப்புப் பணம் இல்லையா என்று கேட்கலாம். ஆனால் கடுமையான வரி வசூல் முறைகளைக் கையாளுவதன் மூலமும் அதற்கான சட்டத்தைத் தீவிரமாகவும், சிரத்தையோடும் நடைமுறைப்படுத்துவதன் காரணமாகவும் வரி கட்டாமல் ஏய்ப்பது அங்கே எல்லாம் தடுக்கப்படுகிறது.

''பம்பாய் நண்பர் சொல்லுவதைப் பார்த்தால், பெயரளவில் கறுப்புப் பணம்



''மாவு ஆட்டற இடத்தில் பெரிய 'கியூ' நிக்குதே. ஏன்?''

''இங்கு டோக்கன் சிஸ்டமாச்சே. மாவு ஆட்டிட்டு டோக்கன் வாங்கினாத் தான் காக இல்லாமல் டிபன் சாப்பிட லாம்!''

— லலிதா செல்லப்பா.

என்று ஒன்று இராது. ஆனால், வாங்கும் சக்தி, சிலரிடம் அதிகமாக இருக்கும். அதனால் செல்வமாகவும், சொத்தாகவும் சிலரிடம் மட்டுமே அளவுக்கு மீறி இருக்கும் நிலை உருவாகும். கட்டுப்படுத்தவும் முடி யாது! அப்படிப்பட்ட ஏற்றத்தாழ்வு மிக்க சமுதாயத்தையா அன்பர் விரும்புகிறார்?

''வரிகள் வசூலித்து, போக்குவரத்து, பொதுச் சுகாதாரம், உணவு தானியங்கள் இவற்றைக் குறைந்த செலவில் (சப்ஸி டைஸ்ட்) மக்களுக்கு வழங்குவது அல்லவா நல்லது?

''நண்பர் சொல்லுவது போல வசூலிக்க ஆகும் செலவு வரிக்குச் சமமாகி விடுகிறது என்பது சரியல்ல. பன்னிரண்டு முதல் பதி னைந்து சதம், மொத்த வருவாயில், வரு மான வரியாக இருக்கிறது. கஸ்டம்ஸ், எக்சைஸ் அதிகப் பங்கு வகிக்கிறது.

''தொழில் துறையில் கூட, உற்பத்தி அதிக மாகச் செய்தும் அதைக் குறைத்துக் காட்டி, அதன் மீதான தீர்வைகளைக் குறைவாகச் செலுத்தி, கறுப்புப் பணம் உருவாக்க வகை இருக்கிறது. வருமான வரி ஏய்ப்பினால் மட்டுமே கறுப்புப் பணம் உருவாகிறது என்று சொல்ல முடியாது.

''எண்ணெய் வளம் மிக்க மத்திய கிழக்கு நாடுகள் ஒரு சிலவற்றில் மட்டுமே வருமான வரி வசூலிப்பதில்லை. இந்தியா போன்ற வளரும் நாடுகளில் வருமான வரியே கூடாது என்று யாரும் யோசனை சொல்ல மாட்டார்கள்!''

— எஸ். வி. என்.

---

# உதவும் கரங்களுக்கு உதவுங்கள்

## பேரன்புமிக்க பெரியீர்:-




நமஸ்காரம், நாம் யாவரும் எம்மதத்தினராயினும் நம் குடும்பத்தில் அனேக சந்தோஷ வைபவங்கள் - உதாரணமாக குழந்தைகள் பிறந்த நாள், அவர்களது கல்யாணம் முதலியவை கொண்டாடுகிறோம். எந்த சந்தோஷ வைபவத்திற்கும் சிலவு செய்ய ஆரம்பிக்கு முன் கடவுளுக்கென்று ஒரு சிறு தொகை அர்ப்பணம் செய்தால் - அந்த சிறு தொகை அனாதை, ஆதரவற்றவர்களின் கண்ணீரை துடைக்க உபயோகபட்டால் - நமது சந்தோஷ வைபவம் கடவுள் கிருபையால் சிறப்பாக நடக்கும் என்பது நமது பெரியோர்களின் முடிவான அபிப்ராயம். அது பற்றி யாவர்க்கும் சந்தேகம் இருக்க முடியாது.

உங்களுக்கு தெரியுமா? நடமாடும் உலகத் தாயான அன்னை தெரசா அவர்களை பின்பற்றி சென்னையில் மகத்தான தொண்டு புரியும் ''உதவும் கரங்கள்'', ஸ்தாபனம், ஜாதி மத தேச பேதம் இல்லாமல் வயதான அனாதையான, தேக மன நலமற்ற பெரியோர்கள், கைம்பெண்கள், கணவனால் கைவிடப்பட்ட பெண்கள், அனாதை சிறுமியர்கள் ஏற்று அன்பை பொழிகிறது. எல்லாவற்றிற்கும் சிகரமாக உறவினர்களாலும், சமூகத்தாலும், ஏன், அரசாங்கத்தாலும் கைவிடப்பட்டு, ஆஸ்பத்திரி வராந்தாவிலும், குப்பை மேடுகள் பக்கத்திலும் கவனிப்பாரற்று மரணத்துடன் போராடும் அனாதை, யாவரே ஆயினும் அவர்களை ஏற்று அவர்கள் குணம் அடைய பாடுபடுகிறார்கள். அவர்களது மரணம் நிச்சயம் என தெரிந்தால், அவர்கள் உயிர் பிரியுமுன்பே அவர்களுக்கு சுய ஞாபகம் இருக்கும் பொழுதே, அவர்கள் வேண்டிக் கொண்ட பிரகாரமே மரணமான பின் கிரியைகள் நடக்கின்றன. இம் மகத்தான பணி இரவு பகல் 24 மணி நேரமும் நடக்கிறது.

இம்மாபெரும் தொண்டுக்கு தனி நபரோ, தனியார் ஸ்தாபனமோ, அரசாங்கமோ ஆதரவு கிடையாது. ஆகவே உதவும் கரங்களுக்கு அன்புக்கரம் நீட்டும் நாம் தான் மறைமுகமாக துன்பமுற்றோர் கண்களை துடைக்கிறோம். ஆக நமது சந்தோஷ வைபவங்களுக்கு செலவு ஆரம்பிக்கும் முன்பு குறைந்தது ரூ.5/- அதிகம் SKY HIGH எவ்வளவு அதிகமாகவும் - உதவும் கரங்கள் ஸ்தாபனத்துக்கு அனுப்ப அர்ப்பணிக்க வணங்கி இருகரம், கூப்பி கேட்டுக்கொள்கிறேன். முடிந்தவர்கள் வருஷத்தில் ஒரு நாள் சம்பளமாவது அனுப்பலாம். ஒரு வேளை உணவிற்கு ஆகும் செலவினையாவது ஏற்றுக் கொள்ளலாம். பல துளி, பெரு வெள்ளம், நல்ல மனமுடையோர் கருணை உள்ளத்தால் பெரு வெள்ளம் ''பெரும் சமுத்திரமாக'' ஆகிவிடும்.

நான் உங்களைப் போன்ற பங்களூரில் வாசம் செய்யும் ஒருவன் தான். நான் வங்கி அதிகாரியாக இருந்து ஒய்வு பெற்றவன். உதவும் கரங்களின் உன்னதமான சேவையை பத்திரிகை வாயிலாகவும் நேரிலும் கண்டு மனம் நெகிழ்ந்து இந்த விண்ணப்பத்தை தமிழ் மக்கள் முன்பு வைக்கிறேன்.

இந்த சிறு விளம்பரம் வெளிக்கொணர்ந்து இதன் மூலம் உதவும் கரங்களை பலப்படுத்த முடியும் என்று மனப்பூர்வமாய் நம்புகிறேன். இதில் ஆழ்ந்த மன சந்துஷ்டியை அடைகிறேன்.

நல்லவர்களை இனம் கண்டு நான்கு பேருக்கு அறிவித்தல் நல்ல செயல் என்று எண்ணுகிறேன். என் தாழ்மையான விண்ணப்பம் ஏற்று தமிழுலகம் எளியோர் கண்ணீரைத் துடைக்கட்டும்.

என்றென்றும் அன்புடன்,

G. கிருஷ்ணமூர்த்தி

**உதவும் கரங்கள் முகவரி :**

**எஸ். வித்யாகர்,**
**உதவும் கரங்கள்,**
**460, என்.எஸ்.கே. நகர்**
**சென்னை - 600 106.**

**போன் எண் : 426141.**

# தியானம் பழகும் கிராமங்கள்

"முன்னெல்லாம் எனக்குக் குடிப் பழக்கம் இருந்ததுங்க. விடவே முடியலை. ஆனா இப்போ அப்படியில்லை. ஆழ்நிலைத் தியானம் கத்துக்கிட்டுத் தொடர்ந்து விடாம செய்யச் செய்ய, குடிக்கிற எண்ணமும் கொஞ்சம் கொஞ்சமா மறந்தே போச்சு. இப்போ சுத்தமா நான் குடிக்கிறதில்லை. உடம்பும் நல்லா இருக்கு..." என்றார் சென்னையை விட்டு விலகியிருக்கும் மெதூர் என்னும் கிராமத்தைச் சேர்ந்த முனிவேல்.

"எனக்கு மூளைல ஆபரேஷன் நடந்ததுங்க. அப்படியும் முழுசாக் குணமாகலை. பொன்னேரியில இருக்கிற வாத்தியார் ஒருத்தர் ஆழ்நிலைத் தியானம் கத்துக்கிட்டுச் செஞ்சு பாரு குணமாகும்னு சொன்னாரு. அதேபடி செஞ்சேன். இப்போ முழுசாக் குணமாயிட்டேன்!" என்றார் ரவிச்சந்திரன் என்ற இளைஞர்.



முனிவேல்



ரோஜா

"எனக்கு அப்பப்போ உடம்புக்கு வந்துடும்ங்க. அடிக்கடி டாக்டர்கிட்டே போயே ஆகணும். ஆனா, இப்போ நான் சுத்தமா டாக்டர்கிட்டே போறதே இல்லை. மனசுக்கும் நிம்மதியாக இருக்கிறது..." என்றார் ஆயா வேலை செய்யும் ரோஜா.

"எனக்கு ஏகப்பட்ட பிரச்னைங்க. படுத்தாத் தூக்கமே வராது. புரண்டு புரண்டு படுக்கிறதுதான் மிச்சமா இருக்கும். ஆனா இந்த ஆழ்நிலைத் தியானம் செய்ய ஆரம்பிச்சதிலேர்ந்து, படுத்த உடனே தூங்கிடறேன். ஏராளமான பண வசதி படைச்ச பணக்காரனை விடவும் நான் நிம்மதியா இருக்கேன்!" என்றார் பக்தவத்சலம்.

"நான் இந்த கிராமத்திலே டாக்டராக இருக்கிறேன். ஆழ்நிலைத் தியானம் செய்ய ஆரம்பித்ததிலிருந்து டென்ஷன் என்பதே இல்லை. ஏராளமான பொறுமை வந்துவிட்டது எனக்கு. இதெல்லாம் என் தொழிலுக்கு மிகவும் உதவியாக இருப்பதோடு, என் உடலுக்கும் ஆரோக்கியத்தைக் கொடுக்கின்றன!" என்றார் டாக்டர் ராமன்.

இந்த மெதூர் கிராமத்திற்கு ஆழ்நிலைத் தியானத்தை அறிமுகப்படுத்தியது யார்?

"ஏதோவொரு பத்திரிகையில் பாலகுமாரன் இந்த ஆழ்நிலைத் தியானத்தைப்

பற்றி எழுதியிருந்ததைப் படித்தேன். நாமும் அதைச் செய்து பார்த்தால் என்ன என்று தோன்றியது. உடனே சேத்துப்பட்டிலுள்ள மகரிஷி மகேஷ் யோகியின் ஆழ்நிலைத் தியான மையத்திற்குச் சென்றேன்.

''அங்கு தியானம் சொல்லித் தரும் திரு. ஜனார்த்தனத்தைச் சந்தித்தேன். அவர் முறைப்படி சொல்லித் தந்தார். 'தினமும் காலையிலும் மாலையிலும் சுமார் இருபது இருபது நிமிடங்கள் செய்தால் போதும். ஆறு மணி நேரத் தூக்கத்தில் நமக்கு எவ்வளவு ஓய்வு கிடைக்குமோ அதைப் போல் இரண்டு மடங்கு ஓய்வு இந்த இருபது நிமி. ஆழ்நிலைத் தியானத்தில் கிடைக்கும்'



ரவிச்சந்திரன்    டாக்டர் ராமன்

என்றார்.

''எனக்கு ஒரே ஆச்சரியமாக இருந்தது. ஆனால் இந்த ஆழ்நிலைத் தியானத்தைச் செய்யச் செய்ய அவர் சொன்னதெல்லாம் உண்மை என்பதை நானே உணர ஆரம்பித்தேன். என்னையறியாமலேயே என் மனத்தில் ஓர் உற்சாகம் பிறந்தது. எத்தனை வேலையானாலும் சலிப்போ டென்ஷனோ இல்லாமல் செய்ய முடிந்தது! எனவே இதை என் குடும்பத்திலுள்ளவர்களுக்கும் சொல்லித் தந்தேன்.

''என்னைப் போலவே ஆழ்நிலைத் தியானம் பயில வந்தவர் குமார். இருவரும் நண்பர்களானோம். 'உலகிலுள்ள ஒரு சதவிகித மக்கள் ஒன்று சேர்ந்து கூட்டுப் பிரார்த்தனையாக இந்த ஆழ்நிலைத் தியானம் செய்தாலே போதும் உலகம் சுபிட்சமாக இருக்கும்' என்று மகரிஷி மகேஷ் யோகி சொன்னதும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும் என்ற நம்பிக்கை எங்களுக்கு வந்தது.

''இந்த நிலையில் இதை ஏன் நமது கிராம மக்களுக்கு அறிமுகப்படுத்தக் கூடாது? நானும் எனது நண்பரும் தீவிரமாகச் சிந்தித்தோம். கிராம மக்களிடம் சென்று ஆழ்நிலைத் தியானம் சொல்லித் தர முடியுமா என்று ஜனார்த்தனம் அவர்களிடம் கேட்டோம். அவரும் சந்தோஷமாக ஒப்புக் கொண்டார்.

''உடனே நாங்கள் செயலில் இறங்க



ஜனார்த்தனம்



குமாரும், கமலக்கண்ணனும்.

ஆரம்பித்தோம். முதலில் எங்கள் உறவினர்கள் இருக்கும் ஆற்பாக்கம் கிராமத்திற்குச் சென்றோம். அங்குள்ள மக்களிடம் தியானம் பற்றிப் பேசினோம். அவர்களுக்கு முதலில் இதைப் புரிந்து கொள்ளவே முடியவில்லை. அதனால் எங்களை மதம் மாற்ற வந்தவர்கள் என்றும் அரசியல் கட்சிகளுக்கு ஆள் பிடிக்க வந்தவர்கள் என்றும், அமெரிக்காவிலிருந்து நாங்கள் பணம் பெற்றுக் கொண்டு இப்படி கிராம மக்களிடம் வந்து ஏதேதோ சொல்லி ஏமாற்றுகிறோம் என்றுமே அவர்கள் சந்தேகப்பட்டார்கள்.

''அவர்களுடைய நியாயமான சந்தேகங்களையெல்லாம் நாங்கள் பொறுமையாகக் கேட்டு விளக்கம் தந்த பிறகுதான் ஒருவாறு அவர்கள் சமாதானமானார்கள்.

''கிராம மக்களிடம் தியானம் பற்றி எடுத்துச் சொல்ல வேண்டுமென்றால் முதலில் அவர்களையெல்லாம் ஓரிடத்தில் கூடச் செய்ய வேண்டுமே! 'தியானம்' என்று சொல்லி கிராம மக்களை எப்படி ஒன்று திரட்ட முடியும்? எனவே, மெல்லிசை நிகழ்ச்சி ஒன்றை ஏற்பாடு செய்து, அதன் மூலம் அவர்களைத் திரட்டி பிறகு தியானம்



பக்கவத்சலம்

''பெரிய செலவு ஏதுமில்லை. போக்கு வரத்துச் செலவு மட்டும்தான். நண்பர் குமார் ஜீப் வைத்திருக்கிறார். அவரே பெட்ரோல் செலவுகளை ஏற்றுக் கொண்டு, ஜீப்பையும் ஓட்டி வந்து விடுகிறார். மற்ற சிறு சிறு செலவுகளை அவரவரும் பகிர்ந்து கொள்கிறோம். ஏதோ எங்களால் ஆன சிறு சமுதாயப் பணி என்றுதான் வைத்துக் கொள்ளுங்களேன்!'' என்றார் கமலக்கண்ணன்.

பற்றி விளக்கலாம் என்று திட்டமிட்டு மெல்லிசை நிகழ்ச்சியை நடத்தினோம்.

''அந்த நிகழ்ச்சிக்காக ஒன்று கூடிய மக்கள், 'எதற்காகத் திடீரென்று இந்தப் பாட்டுக் கச்சேரி?' என்று எங்களைக் கேட்டார்கள். எங்கள் நோக்கத்தை எடுத்துச் சொன்னோம். உடனே அவர்கள், 'இதற்காகவா இத்தனை ஏற்பாடு? அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். பாட்டுக் கச்சேரியை முதலில் நிறுத்தி விட்டுச் சொல்ல வந்ததைச் சொல்லுங்கள்' என்றார்கள். நாங்களும் அதன்படி தியானத்தினால் ஏற்படும் நன்மைகளை எடுத்துச் சொன்னோம்.

''இந்த ஆழ்நிலைத் தியானம் என்பது காட்டுக்குச் சென்று சாமியாராகிச் செய்யும் விஷயமல்ல. வீட்டிலிருந்தபடியே செய்யலாம். பஸ்ஸில் உட்கார்ந்து பயணம் செய்யும் போது கூட இதைச் செய்ய முடியும். இதற்கு ஜாதி, மத பேதங்களெல்லாம் கிடையாது. யார் வேண்டுமானாலும் செய்யலாம்' என்று சொல்லி, ஜனார்த்தனம் அவர்களுக்கெல்லாம் எப்படி தியானம் செய்வது என்று கற்றுக் கொடுத்தார்.

''ஆற்பாக்கத்தில் ஏற்பட்ட நல்ல பலன்களைக் கண்கூடாகக் கண்டதால், மேலும் சென்னையைச் சுற்றியுள்ள பம்மல், மணவாளநகர், ஆலூர், அரசூர், மெதூர் என்று பல கிராமங்களுக்குச் சென்று சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தோம். அவர்களும் நல்ல முறையில் கற்றுக் கொண்டு, நல்ல பலன்கள் கிடைத்திருப்பதாகச் சொல்கிறார்கள். அதற்கு ஓர் உதாரணமாகத்தான் இந்த மெதூர் கிராம மக்களை நீங்களே சந்தித்திருக்கிறீர்களே...'' என்றார் கமலக்கண்ணன்.

''ஆமாம், இதற்கெல்லாம் செலவாகுமே?''

**''உ**ங்களுக்கு எப்படி இதில் ஆர்வம் வந்தது?'' — சென்னையிலுள்ள மகரிஷி மகேஷ் யோகி ஆழ்நிலைத் தியான மையத்தில் தியான ஆசிரியராக இருக்கும் ஜனார்த்தனத்திடம் கேட்டோம்.

''நான் சட்டம் படித்தேன். ஆயினும் வக்கீல் தொழிலில் தொடர்ந்து என் நாட்டம் செல்லவில்லை. ஆன்மீகத்திலேயே என் மனம் லயித்தது. அதன் விளைவாக வக்கீல் தொழிலை விட்டு விட்டு ரிஷிகேஷம் சென்று ஆழ்நிலைத் தியானப் பயிற்சி பெற்றேன். பிறகு மகரிஷி மகேஷ்யோகி அவர்களுடனும் சில மாதங்கள் இருந்தேன். கடைசியில் ஆழ்நிலைத் தியான ஆசிரியராகச் சென்னையிலுள்ள மையத்திற்கு வந்து விட்டேன்.

''பல பேருக்கு இங்கே இந்த ஆழ்நிலைத் தியானம் சொல்லிக் கொடுக்கும் வாய்ப்பைப் பெற்றாலும் கூட, இதை நமது கிராம ஜனங்களுக்கும் சொல்லிக் கொடுக்க வேண்டும். அவர்களும் இதன் முழுமையான பயனைப் பெறுவது அவசியம் என்ற எண்ணம் வளர்ந்து கொண்டே வந்தது. அச்சமயத்தில்தான் கமலக்கண்ணனும் குமாரும் என்னிடம் வந்து, கிராம மக்களுக்கு வந்து ஆழ்நிலைத் தியானம் சொல்லித் தர முடியுமா என்று கேட்டார்கள். இனி, ஆழ்நிலைத் தியானத்தோடு யோகாசனப் பயிற்சியையும் கிராம மக்களுக்குக் கற்றுத் தர உத்தேசித்துள்ளோம். இன்னும் புதிய புதிய கிராமங்களுக்குச் சென்று கற்றுத் தர உள்ளோம்!'' என்றார் ஜனார்த்தனம்.

**— சாங்கிருத்யாயன்**

அட்டை வண்ணப்படமும், படங்களும்: **ரமணன்**

---

**அடுத்த இதழில்.....**

**''படத்துக்கு ஒரு பாட்டாவது கர்நாடக இசையில் இருக்கக் கூடாதா?''**

**— ஜேசுதாஸ் சிறப்புப் பேட்டி**



உ

ஸ்ரீராம ஜெயம்

# ஸ்ரீ காயத்ரி ஞானவாபி

## குரோம்பேட்டை




ஸ்ரீ காயத்ரி டிரஸ்ட் குரோம்பேட்டையினால், லெக்ஷிமி புரத்தில் 2 கிரவுண்ட் நிலம் வாங்கப்பட்டு ''ஸ்ரீ காயத்ரி ஞானவாபி'' (கர்மாக்கள் செய்யும் இடம்) நவீன வசதிகளுடன் கட்டப்பட்டு, பொதுமக்களின் உபயோகத்திற்காகத் திறந்து விடப்பட்டுள்ளது. கர்மாக்கள் செய்ய சகல வசதிகளுடன் கூடிய சிறந்த இடம் என்ற பெயர் பெற்றுள்ளது. தேவைப்படுவோர் தொலைபேசியிலோ (எண்: 405884) நேரிலோ தொடர்பு கொள்ளுமாறு வேண்டுகிறோம்.

காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் விஜயம் செய்து சுபஸ்வீகாரம் மற்றும் விஸ்தரிப்புப் பணியினை தொடங்கி வைத்துள்ளார்கள். மேற்படிப் பணிகளை முடிக்க ரூ. 2.50 லட்சம் வரை செலவு ஆகும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது.

பணம் பற்றாக்குறை காரணமாக மேற்படிப் பணி விரைவில் செயல்படுத்துவது தடைப்பட்டுள்ளது. மேற்படி சத்காரியம் முடிவுற, இயன்ற அளவு நன்கொடைகள் அளிக்குமாறு வேண்டுகிறோம். நன்கொடைகளுக்கு வருமானவரி பிரிவு 80-G படி வரிவிலக்கு உண்டு. நன்கொடைகளை **"SHREE GAYETHRI TRUST, CHROMEPET"** என்ற பெயரில் செக்காகவோ அல்லது டிராப்டாகவோ அனுப்புமாறு வேண்டுகிறோம்.

இப்படிக்கு


**G. இராகவன்**<br>
**MANAGING TRUSTEE,**<br>
**SHREE GAYETHRI TRUST**<br>
**45, LAKSHMI NAGAR**<br>
**CHROMEPET, MADRAS - 600 044.**



கல்கி

1990 மார்ச் 18
மலர் 48 இதழ் 33
சுக்ல பங்குனி 5



# நாடு கண்ட நூறு நாட்கள்

**நூ**று நாள் கண்ட பிரதமர், இதுவரை அமைதியாகவும் அடக்கமாகவும் இருந்து கொண்டு அழுத்தமாகக் காரியங்களைச் செய்து வருகிறார்.

தேவிலாலின் மகன் சௌடாலா போட்டியிடும் மேஹம் தொகுதியில் நடந்த அட்டகாசங்கள், தேசிய முன்னணி ஆட்சிக்கும் குறிப்பாக ஜனதா தளத்துக்கும் இழுக்குத் தேடித் தருவன. ஆயினும் அந்தத் தொகுதி முழுவதிலும் மறு தேர்தல் நடத்துமாறு ஒரு கோரிக்கையைத் தேர்தல் கமிஷனிடம் தேவிலாலே சமர்ப்பிக்கும்படி செய்தது, வி. பி. சிங்கின் ராஜதந்திரமே. பிரதமரே இந்தக் கோரிக்கையை விடுத்திருந்தால் கூட அவ்வளவாகப் பயனிராது. ஆரம்பத்தில் முரண்டு பண்ணிய தேவிலாலைச் சரிக்கட்டி, தேவிலாலுடைய யோசனையாகவே இதை வெளியிடச் செய்து, கட்சி உடையாமலும் ஆட்சிக்கு பங்கமில்லாமலும் காத்துக் கொண்டு, அதே சமயம், 'சௌடாலா ராஜினாமா செய்ய வேண்டும்' என்று கூக்குரல் எழுப்பியவர்களையும் சமாதானப்படுத்தியிருக்கிறார்!

போஃபர்ஸ் பேரம், நீர்மூழ்கி பேரம் ஆகியவற்றில் குற்றச்சாட்டுக்கள் பதிவாகி, வழக்குத் தொடர வழி ஏற்பட்டிருக்கிறது. சிரமமான, நீண்ட பாதைதான். தீர்ப்பு என்னவாக இருக்குமோ அதுவும் தெரியாது. ஆயினும், 'ஒரு தவறும் நடக்கவில்லை' என்று பூசி மெழுகிய ராஜீவின் போக்குக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! மேல் மட்டங்களில் தூய்மையான ஆட்சியும் இருக்க வேண்டும்; தூய்மையான ஆட்சிக்குப் பாடுபடுவதாகக் காட்டிக் கொள்ளவும் வேண்டும். இந்தப் போக்குத்தான் படிப்படியாக அடிமட்டம் வரை ஓர் ஆரோக்கியமான மாற்றத்தை ஏற்படுத்த உதவும். தொழில் — பொருளாதாரக் கொள்கைகளில் சில மாறுதல்களைப் புகுத்தினால் இந்த நற்பணி மேலும் துரிதமடையும்.

'பிரதமர் தனி விமானத்தில் பறப்பதே தேவலாம்; இதர பயணிகளுள் ஒருவராக அவர் விமானத்தில் செல்லும் போது, பலருக்கும் பாதுகாப்புப் பிரச்னைகள் காரணமாகத் தொல்லைகள் ஏற்படுகின்றன' என்று ஓர் எதிர்ப்புக் குரல் எழ, உடனே இது பற்றி விசாரணை நடத்துமாறு உத்தரவிட்டிருக்கிறார் பிரதமர். தாம் அணிந்து வந்த குல்லாய்க்காக ஆட்டுக் குட்டிகள் சித்திரவதைக்குள்ளாவதாகத் தெரிய வந்ததும், 'இது அறியாமல் நடந்து விட்ட பிழை' என்பதாக ஒப்புக் கொண்டு, மேனகா காந்தி தந்த செயற்கை உரோமக் குல்லாயைப் பயன்படுத்த ஆரம்பித்து விட்டார். இவை போன்ற செயல்களால், தம்மை விமர்சனம் செய்கிறவர்களைச் சகித்துக் கொள்கிற சக்தியும், திருத்திக் கொள்கிற பெருந்தன்மையும் தமக்கு இருப்பதை நிரூபித்து வருகிறார், பிரதமர்.

ராமஜன்ம பூமி பிரச்னை தீர்ந்து போய் விடவில்லை; ஒத்திப் போடப்பட்டிருக்கிறது, அவ்வளவே. என்றாலும் அப்படி ஒத்திப் போட பரிக்ஷத் தலைவர்களை ஒப்புக் கொள்ள வைத்ததே பெரிய சாதனைதான். எல்லாத் தரப்பிலும் உணர்ச்சி வேகங்கள் அடங்க, நல்ல தீர்வு காணப்படும் என்று எதிர்பார்க்கலாம். பரிக்ஷத் தலைவர்களிடம் அசாதாரண பொறுமை காட்டி, பலமுறை பேசி வெற்றி கண்டிருக்கிறார் பிரதமர்.

பெரிய தலைவலியாக விளங்கும் காஷ்மீர் பிரச்னையில், பி. ஜே. பி. போன்ற தோழமைக் கட்சிகளை மட்டுமின்றி, தம்மை மிக அதிகமாகக் குறைகூறி விமர்சிக்கும் ராஜீவ் காந்தியையும் வி. பி. சிங் கலந்தாலோசிப்பதானது அவரது பரந்த உள்ளத்தையும் ஜனநாயகப் பண்பையும் உணர்த்துகிறது. மமதை என்ற மட்டமான குணம் தம்மிடம் இல்லை என்பதைத் தமது ஒவ்வொரு செயலிலும் உணர்த்தி வருகிறார்.

நாடாளுமன்ற ஜனதா தளக் கட்சிக் கூட்டங்களில், சந்திரசேகருக்கு முக்கியத்துவம் தந்து, அவர் கருத்துக்களை அறிய முயல்வதும், தேவிலாலை சமாளித்துக் கொண்டு போவதும் அசாதாரண சாமர்த்தியங்கள்.

'இதற்கெல்லாம் காரணம், அவர் கட்சி பூரண மெஜாரிட்டி பெறாததுதான்' என்று காரணம் கூறப்படலாம். ஆனால் அதுமட்டுமல்ல காரணம். வி. பி. சிங்கின் இயல்பே வரவேற்கத்தக்க ஒன்றாக விளங்குகிறது.

இன்னும் பல நூறு நாட்கள் சென்ற பிறகும் இந்த இயல்பு, இப்படியே நீடிக்கட்டும். பிரதமரின் குணநலன்களும், இன்று அவர் நடந்து கொள்ளும் விதமும் மாநில முதல்வர்கள் எல்லாருக்குமே வழிகாட்டுவதாக அமைந்துள்ளது. பின்பற்றினால், அந்தந்த மாநிலங்களுக்கும், ஒட்டு மொத்தமாய் நாட்டுக்கும் நல்லது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# கண்டக்டர்கள்—மாணவர்கள் மோதல் ஏன்?

— பச்சையப்பன் கல்லூரி மாணவ, மாணவியர் அலசுகிறார்கள்!

சசிகலா: மாணவர்களுக்கும் கண்டக்டர்களுக்கும் அடிக்கடி மோதல்கள் ஏற்படுவதற்குக் காரணம், மாணவர்கள் படிக்கட்டில் பயணம் செய்வதுதான் என்று நினைக்கிறேன். பஸ்ஸில் ஏறுகின்ற மற்ற பயணிகளுக்கு இடையூறாகத் திரும்பத் திரும்ப ஏறவும் இறங்கவும் செய்தால் கண்டக்டர் ஏறுகிறவர்களை எப்படிக் கணக்கிட்டு டிக்கெட் கொடுக்க முடியும்? இது அவர்களுடைய பணிக்கு இடையூறாக இருக்கிறது. அப்படி இருக்கும் போது யாருக்குத்தான் கோபம் வராது?

சேகர்: இதற்கு மாணவர்களைக் குறை சொல்லிப் பிரயோஜனமில்லை. நெரிசல் நேரங்களில் கூடுதலாகப் பஸ் விட வேண்டும். அதற்கு வழி இல்லை! ஆபீஸ் போகிறவர்கள், ஸ்கூலுக்குப் போகின்ற சிறுவர்கள், காலேஜ் ஸ்டூடண்ட்ஸ்... எல்லோருமே ஒரே பஸ்ஸை நம்பிப் போகிறோம். அதுவும் ஸ்டாப்பிங்கில் பஸ் எங்கே நிற்கிறது? தள்ளி நிற்பதால் ஓடிப் போய் ஏறவேண்டி வருகிறது. பொறுமையாக நிறுத்தி, மக்களை ஏற்றிச் செல்வதில்லை. அந்த நேரத்தில் வயதானவர்களுக்கு உள்ளே இடம் தந்துவிட்டு, நாங்கள் ஃபுட் போர்டில் பயணம் பண்ண வேண்டி வருகிறது. உள்ளே இடம் இருந்தால் யாரும் ஃபுட் போர்டில் நிற்க மாட்டோம். பஸ்ஸில் இடமில்லாதது எங்கள் குற்றமா?

வித்யப்பிரியா: அது யாருடைய குற்றமாகவும் இருந்துவிட்டுப் போகட்டும். ஒரு விபத்து என்று வந்துவிட்டால், அது கண்டக்டர்களைத்தானே பாதிக்கிறது. உடனே அவர்கள் மீது ஆயிரம் விசாரணைகள், போலீஸ் கேஸ் அது, இது என்று இழுத்தடித்து விடுகிறார்களே! அவர்களுக்கும் குடும்பம் பிள்ளைகள் என்று இருக்கிறது. அதையும் நாம் யோசிக்க வேண்டும்.



* குமரவேல்



* வித்யப்ரியா

சசிகலா: மாணவர்கள் திட்டமிட்டு கோஷ்டி சேர்ந்து கொண்டு ஒரே பஸ்ஸில்—பெண்கள் கூட்டம் ஜாஸ்தியாக இருக்கின்ற பஸ்ஸில் ஏறி கலாட்டா பண்ணிக் கொண்டே வந்தால் கண்டக்டர்கள் எப்படித் தாங்குவார்கள்? அட்லீஸ்ட் அந்த ரூட்டில் வருகிற எல்லா பஸ்களிலும் சற்று காத்திருந்து ஏறிச் செல்லலாமே!

சேகர்: நீங்கள் சொல்லுவது வினோதமாக இருக்கிறது! ஃபுட் போர்டில் ஆயிரம்



• சேகர்

பேர் தொங்கிக் கொண்டு வந்தாலும் லேசான நீங்களும் முண்டி அடித்து நுழைந்து கொள்ளத்தானே பார்க்கிறீர்கள். அடுத்த பஸ்ஸில் வருவோம் என்று விலகி நிற்க முடிகிறதா? முடியாது! அடுத்த பஸ் எப்போது வருமோ? வந்தாலும் ஸ்டாப்பிங்கில் நிற்குமா? நின்றாலும் ஏற இடம் இருக்குமா? இப்படியெல்லாம் யோசிக்க வேண்டி வருகிறதே! இரண்டாவது யாரும் எந்த பஸ்ஸிலும் திட்டமிட்டுக் கும்பலாக ஏறுவதில்லை. காலேஜ் நேரத்தை ஒட்டி அந்த ரூட்டில் வருகின்ற பஸ்களில் மாணவர் கூட்டம் இருக்கத்தான் செய்யும். அதை எப்படித் தவிர்க்க முடியும்?

குமரவேல்: மாணவர்களோடு கண்டக்டர்கள் கொஞ்சம் அனுசரித்துப் போனால் எந்தவிதமான பிரச்னையும் இல்லை. ஸ்டூடண்ட்ஸ் பஸ்ஸில் சற்று உரக்கப் பேசிச் சிரிப்பதையும் ஜாலியாக கமெண்ட் அடிச்சுக்கிறதையும் கண்டக்டர்ங்க பெரிசு பண்ணிக்க வேண்டியதில்லை. பசங்களோட போக்கிலே விட்டு, அவர்களும் ஜாலியலாக எடுத்துக் கொண்டு பிஹேவ் பண்ணினார்கள் என்றால் ஒரு பிரச்னையும் வராது. அதை விட்டுவிட்டு 'ஆத்தா அப்பன் உழைச்சுப் படிக்க அனுப்பினா, இப்படி மானா வாரியாத் திரியுதுங்களே! இதெல்லாம் உருப்படுமா?' என்று கண்டபடி பேசிப் பசங்களை வெறுப்பேத்தும் போது தானே பிரச்னையே வருகிறது!

ஜான் வின்செண்ட்: கண்டக்டர்களுக்கு ஆயிரம் பிரச்னை. பீக் அவர் நெரிசல் நேரங்களில் மற்றப் பயணிகளையும் பார்க்க வேண்டும். ஸ்டேஜ் குளோஸ் பண்ணிச் சரியாக இன்வாய்ஸ் எழுத வேண்டும். ஒவ்வொரு ஸ்டாப்பிலும் டிக்கெட் ஏற்றி இறக்கி டிரைவருக்கு 'ரைட்' கொடுக்க வேண்டும். இந்த டென்ஷனில் ஸ்டூடண்ட்ஸ் லூட்டிகளை எப்படிச் சந்திக்க முடியும்! எப்பேர்ப்பட்ட மனுஷனுக்கும் வெறுப்பா விடுமே?

சேகர்: எல்லா நேரங்களிலும் இந்தப் பிரச்னை கிடையாதே! காலையிலும் மாலையிலும் ஒன் அவர் — அதுவும் காலேஜ் டேஸ் மட்டும்தான். இதை அவர்கள் சுலபமாகச் சமாளித்துவிட்டுப் போகலாம். வீணாக மாணவர்களை விரோதிகளாக நினைப்பானேன்? நான் நினைக்கிறேன், இது ஒரு தாழ்வு மனப்பான்மையாகக் கூட இருக்கும்! அவர்களின் சொந்தக் குடும்பப் பிரச்னைகளோடு செய்யும் தொழிலை ஒரு சுமையாகவோ தாழ்வாகவோ கூட நினைத்துக் குமைந்து கொண்டிருப்பார்கள். அப்போது மாணவர்கள் எந்தக் கவலையுமே இல்லாது ஜாலியாக வர்றதைப் பார்த்து நமக்கு அப்படி முடியவில்லையே என்கிற ஆதங்கத்தில் மாணவர்கள் மேலே பாய்கிறார்களோ, என்னவோ!

வித்யப்ரியா: நல்ல கதையா இருக்கே! மாணவர்கள் மேலே கண்டக்டர் பாயறாங்களா! பசங்கதான் கண்டக்டர்ங்களைத் தாக்கினதாகவும், கத்தியாலே குத்தினதாகவும் பேச்சு வருகிறது.

சேகர்: ஸ்டூடண்ட்ஸ் சம்பந்தப்பட்ட விஷயம்தான் இப்படி பூதாகார வடிவம் எடுக்கிறது. சில்லறைப் பிரச்சனைகளுக்குக் கூட கண்டக்டர் பப்ளிக்கோட மோதிக்கிட்டிருப்பார். அதெல்லாம் பெரிசாப் பேசப்படுவதில்லை. ஆனால் மாணவர்கள்



• சசிகலா



சின்னதா ஏதாவது பேசிட்டாப் போதும். உடனே இது தாண்டா சாக்குன்னு டிராப்பிக்லே பஸ்சை வரிசையா நிறுத்திடுவாங்க. 'பசங்களோட அடாவடித்தனம் பாருங்க'ன்னு பப்ளிக்ல கெட்ட பேர் ஏற்படுத்திடறாங்க.

ஜான்வின்சென்ட்: சில நேரங்களில் மாணவர்கள் கண்டக்டர்களைத் தாக்கிவிடுகின்ற சம்பவங்களும் நடக்கத்தானே செய்கின்றன. கண்டக்டர்கள் கலவரம் செய்யும் மாணவர்களைப் பற்றி ரிப்போர்ட் கொடுத்தாலும் போலீஸும் எந்தவிதமான ஆக்ஷனும் எடுப்பதில்லையே! ஸ்டுடண்ட் கும்பல் டிக்கெட் வாங்கவில்லை என்றாலும் 'பஞ்சி'ங் கார்டைக் காட்டவில்லை என்றாலும் தொல்லைகளுக்குப் பயந்து கண்டுக்க வேண்டாம் என்று கூட பி. டி. சி. நிர்வாகம் கண்டக்டர்களுக்குச் சாடை காட்டியிருப்பதாகக் கூறுகின்றார்கள். நானே கூடப் பார்த்திருக்கிறேன். மாணவர்கள் கும்பலா ஏதாவது ஒரு பஸ்ஸில் வந்து இறங்கினால் அந்த ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கும் செக்கிங் இன்ஸ்பெக்டர்கள் வேறு பக்கம் திரும்பிக் கொள்கிறார்கள்.

சசிகலா: அப்படி இருக்கிறப்ப ஸ்டுடெண்ட் பஞ்சிங் கார்டு, டோக்கன் சிஸ்டத்தையே மாத்திடலாம். கேரளா போன்ற மாநிலங்களில் ஸ்டுடெண்ட்டுனு சொன்னாலே அரைக் கட்டணம்தான். அப்படி இருந்தால் பிரச்னையே வராதே! கண்டக்டர்கள் உன் 'ஐடி'யைக் காட்டு. 'பஞ்ச்' பண்ணியாச்சான்னு கேட்டவுடனே தான் மாணவர்களுக்கு ஈகோ வந்துவிடுகிறது. அதுவும் பொண்ணுங்க முன்னாடி கேட்டுட்டா சொல்லவே வேண்டாம்.

வித்யப்பிரியா: சரி! இந்த மாதிரியான மோதல்களைத் தவிர்க்க என்ன வழின்னு யோசனை பண்ணலாமே...

சசிகலா: காலேஜ் ரூட்டுலே அதிகம் பஸ் விட்டால் பிரச்னை வராது. மேலும் ஸ்டுடெண்ட் 'ஸ்பெஷல்' காலையிலும் மாலையிலும் விடலாம். பஸ்களில் கூட்டம் குறைந்தாலே எந்தப் பிரச்னையும் இல்லை.

வித்யப்பிரியா: 'பஸ்—டே' என்று கண்டக்டர்களுக்கு மாலை அணிவித்துச் சந்தனம் குங்குமம் எல்லாம் பூசி விளையாடுவதெல்லாம் தேவை இல்லாதது என்று நினைக்கிறேன். உண்மையில் அந்த வருஷம் முழுவதும் இருவருக்கும் நல்ல உறவு இருந்து கண்டக்டர்களும் விரும்பி 'பஸ் டே' கொண்டாடினால் நன்றாக இருக்கும். கண்டக்டர்களுக்கே எரிச்சல் வருகின்ற அளவுக்கு 'பஸ்—டே'யில் நடந்துக்கணுமா?

சேகர்: மாணவர் சமூகம் எப்போதுமே கண்டக்டர்களுக்கு எதிரியல்ல. இதை எல்லோரும் புரிந்து கொள்ள வேண்டும். அதற்காகத்தான் பஸ்—டே கொண்டாட்டம்.

சசிகலா: கண்டக்டர்களுக்கும் மாணவர்களுக்கும் தகராறுகள் ஏற்படாமல் தவிர்க்க கல்லூரி முதல்வர்கள், மாணவர்கள், பல்லவன் பிராந்திய மானேஜர் மற்றும் ஊழியர்களைக் கொண்டு வடக்கு, மேற்கு, தெற்கு, மத்தி என்ற நான்கு பிராந்தியக் கமிட்டிகள் அமைத்திருக்கிறார்கள். அவ்வப்போது ஏற்படுகின்ற சின்னப் பிரச்னைகளைப் பேசித் தீர்த்துக் கொள்ள இந்த ஏற்பாடு செய்துள்ளது பல்லவன் நிர்வாகம். இது எந்த அளவுக்குப் பயன் தரும்?

குமரவேல்: இதுவே நிரந்தரத் தீர்வு ஆகிவிடுமா? இந்த ஆண்டு ஜனவரியிலிருந்துதான் இந்தக் கமிட்டிகள் போடப்பட்டுள்ளன. போகப் போகத்தான் தெரியும்!

வித்யப்பிரியா: நான் நினைக்கிறேன். ஒருவருடைய மனநிலையை ஒருவர் புரிந்து கொண்டு நடந்தால் எந்தவிதமான மோதல்களுக்கும் இடமே இல்லை. கண்டக்டர்கள் மாணவர்களிடம் கொஞ்சம் அட்ஜெஸ்ட் செய்து கொள்ளத்தான் வேண்டும். கண்டபடி பேசாமல் ஜோவியலாக ஸ்டுடெண்ட்ஸ் பாஷையிலேயே பேசி விட்டுப் போகலாமே! இதே போல் மாணவர்களும் கண்டக்டர்களுக்கு எரிச்சல் உண்டாகாதபடி கூடுமானவரை நடந்துக்கணும். அடிதடி அளவுக்கெல்லாம்ஒருபோதும்போகவே கூடாது. அரசாங்கமும் கூடுதலாகப் பஸ் விட்டு இந்தப் பிரச்னைகளுக்குத் தீர்வு காண வேண்டும். கொஞ்சம் யோசனை பண்ணிப் பார்த்தால் இதெல்லாம் சுலப சாத்தியம் தான் என்பது புரியும்.

தொகுப்பு: **பாரதி பாலன்**

படங்கள்: **சுபா.**

# வெளிச்சம்

**"வே**ண்டாம். ஆளை விடுங்க."

"நீங்க அப்படியெல்லாம் சொல்லக் கூடாது. எங்களுக்கு ஆசை. நீங்க அதை மறுக்கக் கூடாது."

"பாராட்டை எதிர்பார்த்து நான் எதுவும் செய்யலை. என் மனசுக்கு நல்லதுன்னு தோன்றியதைச் செய்தேன். இதைப் பெரிசு பண்ணாதீங்க. எனக்கு இதெல்லாம் பிடிக்காது. நாலு பேரைக் கூப்பிடறது. மணிக்கணக்காப் பேசறது. பேசறவனுக்கு என்னைப் பத்தித் தெரிஞ்சிருக்கோ இல்லையோ, 'ஆள'ன்னு புகழ்வாங்க. இதெல்லாம் தேவையா? ஏதோ நான் பாட்டுக்கு எதையோ செய்திட்டிருக்கேன். இதுக்கு வெளிச்சம் போடறதுக்கு என்ன இருக்கு- கனகு. பேசாம போப்பா." தர்மலிங்கம் எழுந்து விட்டார்.

"ஐயா. நீங்க அப்படித்தான் அடக்கமாச் சொல்வீங்க. உங்களை உலகத்துக்கு இனம் காட்டணும். அது எங்க கடமை...

கனகு கெஞ்சினான். கூடவந்திருந்தவர்களும் தர்மலிங்கம் சம்மதிக்காவிட்டால் எழுந்திருக்கப் போவதில்லை என்று உட்கார்ந்து விட்டார்கள்.

"நல்ல விஷயத்துக்குச் சத்யாகிரகம் பண்ணினாச் சரி. வீணா அடம் பிடிக்கறீங்க."

"நீங்கதான் விட்டுக் குடுக்க மாட்டேங்கறீங்க."

"கொள்கையில விட்டுக் குடுக்கறதுன்னு ஆரம்பிச்சாக் கொள்கையோட உருவமே மாறிடும்!

"பிறர் பாராட்டுவதற்காக நீங்க செய்யல்லை. அது இந்தப் பேட்டையில் இருக்கற குஞ்சுகுளுவானுக்குக் கூட தெரியும். நாங்களே உங்களை பாராட்டணும்னு தேடி வரோம். நீங்க தேடிப் போகலை. இதுலே ஒங்க கொள்கை எப்படி உருமாறும். நீங்க சம்மதிக்கணும். ஒரே ஒருமுறை...."

தர்மலிங்கத்தின் இளகிய மனம் இணக்கம் தெரிவிக்க, கனகுவும் அவன் நண்பர்களும் பெருமிதம் பொங்க வெளியில் போனார்கள்.

தர்மலிங்கம் அந்தப் பேட்டைக்கு இருபது

கங்கா ராமமூர்த்தி

வருடங்களுக்கு முன்பு குடிவந்த போது, அசுத்தமும் அறியாமையும் பேட்டையை ஆக்கிரமித்திருந்ததைக் கண்டார். கம்பெனியில் உயர் அதிகாரி பதவியைத் துறந்து மொத்தப் பணத்தையும் வங்கியில் போட்



டார். கிடைக்கும் வட்டியில் சொற்பத் தொகையைத் தமக்கும் மிகுதியை ஏழை எளியவர்களுக்குமாகச் செலவிட்டார். குழந்தைகள் படிக்கப் புத்தகம், தொழில் படிப்புக்கு வசதி, பெண்களுக்குக் கைத்தொழில் என்று உதவினார். அசுத்தமும் அறியாமையும் ஒரு சில ஆண்டுகளில் ஓடி ஒளிய, இந்தத் தனி மனிதரின் சாதனை உலகுக்கும் தெரிய ஆரம்பித்தது.

**மா**நகராட்சிப் பள்ளி விழாக் கோலத்தில் திகழ்ந்தது. பேட்டை இளைஞர்கள் பம்பரமாகச் சுழன்றார்கள். பேச்சாளர் தலைவர், தர்மலிங்கம் எல்லோரும் வந்ததும் விழா துவங்கியது. தர்மலிங்கத்தை மந்திரி வானளாவப் புகழவும், தர்மலிங்கத்துக்குச் சங்கடமாக இருந்தது. இருப்புக் கொள்ளவில்லை. துளசியின் பெண்ணுக்குப் பிரசவ நேரம். ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறார்கள். விழாவுக்கு ஒப்புக் கொள்ளும் போது, இதை மறந்து விட்டார். அப்படி என்ன செய்து விட்டோம் என்று எல்லோரும் இந்திரன், சந்திரன் என்று புகழ்கிறார்களோ என்ற சலிப்பு ஏற்படத் துவங்கியது. எதற்காக இந்த வீண் செலவெல்லாம் செய்கிறார்கள் என்று கோபம் ஏற்பட்டது. கனகலிங்கத்திடம் வைத்திருந்த அன்பில், இதற்கு ஒப்புக் கொண்ட கணத்தை நினைத்து நொந்து, தலைகுனிந்தார்.

"நாம் எவ்வளவு பாராட்டுகிறோம். அவற்றைக் கேட்டும் இவருடைய தலை கனக்கவில்லை. நெஞ்சு நிமிரவில்லை. எவ்வளவு அடக்கமாகத் தலைகுனிந்து வீற்றிருக்கிறார் பாருங்கள்!" என்றார் மந்திரி.

கூட்டம் கைதட்டிப் பலத்த ஆரவாரம் செய்தது.

சட்டென்று தர்மலிங்கம் நிமிர்ந்தார். கூட்டம் முடிந்து சலசலப்புச் சப்தம் கேட்டது.

தர்மலிங்கம் எழுந்தார். பலருடைய சிரிப்பைப் புன்சிரிப்பால் அங்கீகாரம் செய்தபடியே வெளியே வந்தவரை, ஓர் இளைஞன், குறுக்கே நின்று கையைப் பற்றினான். அவனால் பேச முடியவில்லை. உதடுகள் துடித்தன. கண்களில் கண்ணீர் முட்டி நின்றது.

"ஐயா, உங்களைப் போல நானும் இந்தச் சமூகத்துக்கு உதவியாக இருக்கத் தீர்மானிச்சுட்டேன்!" என்றபடி கையடித்துச் சத்தியம் செய்தான்.

அவன் தோளைத் தழுவி, முதுகைத் தட்டி, தமது சந்தோஷத்தை வெளிக்காட்டினார். இமையோர நீர்த் துளிகளைத் துடைத்தார். பாராட்டு விழா எதற்குக் கொண்டாடுகிறார்கள் என்று அவருக்கு இப்போது புரிந்தது. வெளிச்சம் போட அல்ல. வழிகாட்டத்தான் இந்த வெளிச்சம் என்று புரிய, கனகலிங்கத்தைப் பார்த்து நிறைவோடு சிரித்தார்.



# ஐந்தரை வயதிலேயே கவிதை!

ஊழலற்ற ஆட்சி வர
உண்மைத் தலைவர்
உருவாகணும்!

உண்மைத் தலைவர்
வெற்றி பெற
பொம்மை மனிதர்
மாற வேணும்!

— பதின்மூன்றே வயதுடைய ஒரு சிறுமி எழுதிய கவிதைதான் இது என்றால் நம்ப முடிகிறதா? அதுமட்டுமல்ல; மேற்சொன்ன கவிதை, வரப்போகும் ஒரு கவிதைப் புத்தகத்திலுள்ள அந்தச் சிறுமியின் ஏராளமான கவிதைகளிலிருந்து எடுக்கப்பட்ட ஒரு சாம்பிள் கவிதைதான் என்பது இன்னும் ஓர் ஆச்சரியமான விஷயம்!

ஆனாலும் உண்மை!

''ஐந்தரை வயதிலேயே இவள் கவிதை எழுத ஆரம்பித்து விட்டாள். எட்டாம் வகுப்புப் படிக்கும் இவளுக்கு எதையுமே உற்று நோக்கும் ஆர்வம். அந்த ஆர்வமே இப்படிக் கவிதைகளாக வெளிப்படுகின்றன. கவிதையில் மட்டுமல்ல; பள்ளியில் நடக்கும் பேச்சுப் போட்டிகளிலெல்லாம் கலந்து கொண்டு ஏராளமான பரிசுகளை வாங்கிக் குவித்திருக்கிறாள். தவிர நாடகங்களிலும் சிறப்பாக நடிப்பாள்...'' என்றார் சிறுமி விசாலாட்சியின் தாய் திருமதி வள்ளியம்மை.

''இந்தச் சிறப்புகளெல்லாம் இத்தனை சிறு வயதிலேயே எப்படி வந்தன இந்தச் சிறுமிக்கு?'' என்று திருமதி வள்ளியம்மையிடம் கேட்ட போது, ''எல்லாவற்றுக்கும் காரணம் இவள் அப்பாதான்!'' என்றார் பெருமையோடு.

ஆமாம், அந்த அப்பா யார் என்கிறீர்களா? அவர்தாம் கவியரசர் கண்ணதாசன்!

வண்ணப்படமும், சந்திப்பும்:

**பிரபு சங்கர்.**



# அரங்கேற்ற வேளை

**மா**னாவாரித் திருப்பங்கள் நிறைந்த செமர்த்திக் கதை. வடக்கத்தி (கதை: சித்திக் — லால்) இறக்குமதி.

இருபது வருடங்களுக்கு முன் ஏதோ விபத்தில் இரையான தன் தந்தையின் உத்தியோகம் தனக்குத்தான் என்று எத்தனை தன்னம்பிக்கையோடு வந்தான் அந்தச் சிவ ராமகிருஷ்ணன் (பிரபு) பாவம்! வந்த இடத்தில் சந்தர்ப்பச் சூழ்நிலைகள் அவனை எத்தனை வம்பிலே மாட்டிவிடுகின்றன! ஒரு காதலி, ஒரு சகோதரி, பழைய சிநேகிதனிடம் பெற்ற கல்யாணக் கடன் எல்லாமாய்ச் சேர்ந்து அவரை நெருக்குவதும் — அவற்றிலிருந்து விடுபட ஒரு கிட்நாப் மோசடியில் கூட்டுச் சேர்ந்து ஈடுபடுவதும் — மோசடி உடைபட்டுப் போலீசில் மாட்டிக் கொள்வதும், அப்புறம் போலீசிடமிருந்து விடுபடுவதும் — ஜாக்பாட் ஜயம்தான்!

பிரபு — ரேவதி மோதலில் எந்தத் தருணத்தில் காதல் புஷ்பிக்கப் போகிறது என்று ஒவ்வொரு கட்டத்திலும் நாம் காத்துக் கொண்டிருக்க அவர்கள் கனவு டூயட்டிலே சாடை காட்டிக்கொண்டிருப்பது நியாயமா?

ரேவதியிடம் ஊசி மிளகாய்க் காரம். பிரபுவை வெறுப்பேற்ற, அவர் ஓர் இளநீரைத் தூக்கி வீச, ரேவதி குனிந்து கொள்ள, இளநீர் நேரே வி.கே.ஆரின் முன் மண்டையைத் தாக்கிச் சாய்க்க, 'ஐயோ, ஐயோ, ஐயோ, எத்தனை பெரிய காய்! இந்நேரம் உங்க உசிரே போயிருக்குமே!' என்று அவரை விசிறி விட்டு வேடிக்கை பார்ப்பதாகட்டும்; நான் வெத்துப் பேப்பர்ல கையெழுத்துப் போட்டுத் தர்றேன்; எங்கே நீ போட்டுக் கொடு பார்க்கலாம்; உன்னால முடியாது என்று ரோஷமூட்டுவதாகட்டும்; ஏர் ஹோஸ்டஸ் வேஷம் கட்டி, எவர் கட்டும் வீட்டையோ தன் வீடு என்கிற மாதிரி செட்டப் செய்து பெற்ற தாயையே ஏமாற்றிக் கொண்டிருக்கும் ரேவதியின் எதிரில் திடும் பிரவேசமாய்ப் பிரபு நுழைந்து ஓர் அமர்த்தல் சிரிப்புடன் பிளாக்மெயில் பண்ண முயல, ரேவதி அந்தச் சங்கடத்தைச் சமாளிக்கும் விதமாகட்டும் துள்ளலுக்குத் துள்ளல், ஆழத்துக்கு ஆழம்.

கோமுசுவர ஜெய்கணேஷ் எந்த ரகம் என்று புரிந்து கொள்வதில் சற்றுக் குழப்பம் ஏற்பட்டாலும் ரொம்பச் சுமுகமான முடிவு தந்து பாராட்டுப் பெறுகிறார்.

இடைவேளை வரைக்கும் ஏக அமர்க்களமான துள்ளலில் அரங்கேறும் படம் அப்புறம் ஏதோ வேளை வந்து விட்ட மாதிரி செண்ட்டிமெண்ட் குழப்பத்தில் வழுக்கி விழுந்து விடுமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் போது வந்தாரய்யா ஜனகராஜ் கையையும் காலையும் வீசி வீசிப் போட்டுக் கொண்டு, அந்த ஆபீசுக்குள் நுழைந்து சும்மா தூள் கி ள ப் பி அவர் பண்ணுகிற ஆர்ப்பாட்டம்; உயிரோட்டம் தான்.

டெலிபோன் நம்பர் மாறியதால் வந்த குளறுபடி என்று ஒரு முடிச்சு வைத்திருக்கிறார்களே அது படு பலவீனம். ரேவதி தன் தாயிடம் உள்ள அபரிமிதமான பற்று காரணமாக அவரிடம் தான் ஏர்ஹோஸ்டஸாய் உத்தியோகம் பார்ப்பதாயும் ஏராளமாய்ச் சம்பாதிப்பதாயும் பொய் சொல்லி அவரை ஏமாற்றி, எப்படி எப்படியோ பணம் சம்பாதிப்பதாயும் சொல்வது இன்னொரு பலவீனம். இவற்றையெல்லாம் இட்டு நிரப்புவது போல் கதையில் திருப்பங்கள்!

குறிப்பாக, அந்தக் கடைசி பத்து நிமிடம் கண்ணீரிலும் பன்னீரிலுமாய் மாற்றி மாற்றிப் போட்டு முக்கியெடுக்கிறார்கள் பாருங்கள் — டைரக்டர் முதுகில் ஓங்கித் தட்டலாம் போலிருக்கிறது. ஹாஸ்யரசம் பிழிந்து கொடுத்திருக்கிறார் பாஸில்.

— பி. எஸ். எஸ்.

# தேர்தலில் தோற்றவர்களுக்கு ஆறுதல் தாலேலோ!



- ஆராரோ ஆரிரரோ!

- அன்பே நீ கண்ணுறங்கு
  அழகான விழியுறங்கு!
  அடுத்து வரும் தேர்தலிலே
  ஆண்டவன் புண்ணியத்தில்
  ஆட்சியைப் புடிச்சிடலாம்
  அரியணையில் ஏறிடலாம்.
  அழகு குளிர் காருலதான்
  அவனியெங்கும் சுற்றிடலாம்.

- தினந்தோறும் உன் முகத்தைத்
  தொலைக்காட்சி காட்டுமடா!
  தெருவெல்லாம் உன் ஃபோட்டோ
  மின்னி மினுக்குமடா!

- படுத்துறங்கப் பஞ்சு மெத்தை
  பள்ளியறைச் சொகமிருக்கு
  பாயும் சண்டைக் காட்சிகளை
  பார்க்க இரு சபை இருக்கு.
  பார்த்து அங்கே ரசித்திடலாம்,
  பாய்ந்து நீயும் உதைத்திடலாம்.
  அதுவரைக்கும் நீ தூங்கு.
  அலட்டாமல் இமை மூடு!

- ஆட்சியைப் புடிச்சாலும்
  ஆண்டவனை மறக்காதே —
  ஃபாரினுக்குக் கடத்திப் போய்
  பழங்கால மியூசியத்தில்
  பக்குவமா அவனை வைக்கப்
  பணங்காசைச் சேர்த்துவிடு!
  அதுவரைக்கும் நீ தூங்கு
  அப்புறம்தான் தெம்மாங்கு!

— எழுத்தச்சன்

# மணல்வெளி மான்கள்

**10**

**வையவன்**

எங்கோ ஒரு மூலையில்தான் அந்தப் பந்தயம் உதிக்கிறது. நீயா நானா? உனக்கா எனக்கா? இந்தக் கேள்விகளுக்கும் அந்தப் பந்தயத்திற்கும் தொடர்பில்லை. அந்தப் பந்தயம் தொடங்கும் போது கேள்விகளே இல்லை.

இன்ஸ்பெக்டர் எதிரில் லாக்கப்பிற்குள் நின்ற ஆதியைப் பார்த்து விட்டு, ஊமை மொழியில் மங்கலட்சுமி, ''பே... பே'' என்று ஏதோ புலம்பினாள்.

ஆதி வாய் பேசாமல் அவளைப் பார்த்துச் சிரிக்க முயற்சி செய்தான். முடியவில்லை. கண்களிலிருந்து கரகரவென்று கண்ணீர் வழிந்தது.

''அம்மா... அழாதே. தைரியமாய் இரு'' என்று ஆதி கையை ஆட்டி ஆட்டிச் சைகை செய்தான்.

முந்தானைத் தலைப்பில் வாயைப் பொத்திக் கொண்டு மொழி இல்லாத அந்த அழுகையைக் கட்டுப்படுத்த முயன்றாள் மங்கலட்சுமி.

தைரியம் சொல்கிறவன்; சொல்லப்படுகிறவன்; அதற்கொரு சாட்சியம் போல் நிற்கிறவன். மூன்று பேருக்குமே மனசு தகர்ந்த நேரத்தில்தான் அந்தப் பந்தயம் உதித்தது.

கௌதம் திரும்பி இன்ஸ்பெக்டரைப் பார்த்தான். அவர் நடப்பதைக் கவனிக்காமல் ஒரு பைலைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

''பாத்தாச்சா... சீக்கிரமா வெளியில கூட்டிட்டுப் போ சார்'' என்று ஒரு கான்ஸ்டபிள் அவனைத் துரிதப்படுத்தினார்.

அதுதான் பந்தயம் அவன் மனசுள் உதித்த வேளை. அது பந்தயமா? இல்லை பாதை. ஆசைகள். சலனங்கள். சபலங்கள். விருப்பு வெறுப்புகள். இப்படித் திட்டுத் திட்டாக இருள் பரவியிருக்கிற மனவெளியில் ஒற்றை ஒளிக்கோடு போல் அந்தப் பாதை எழுகிறது.

என் பின்னால் வா. எனக்காக வா. என் பொருட்டு மட்டுமே வா என்று அந்தப் பாதை அழைக்கிறது.

அந்தப் பாதையை நோக்கி ஓடும் போது தான் அது பந்தயம் என்று புரிகிறது.

கௌதம் திரும்பி ஆதியைப் பார்த்தான். எந்த ஆதரவுக்கும் வழியில்லாத ஆதியின் முகத்தைப் பார்த்தான்.

மீண்டும் திரும்பி மங்கலட்சுமியைப் பார்த்தான். ஒரு திக்கற்ற பரிதவிப்பின் பேதைமை அந்த முகத்தில் நிலவிற்று.

ஓர் ஊமைத் தாய். ஒரு பேதை மகன். பெருகி வழிந்து கொண்டிருக்கிற மக்கள் கோடிகளில் சிதறு துளிகள் போல் அத்தனை சாதாரணங்கள்.

சட்டம் இவர்கள் விஷயத்தில் கண்மூடிக் கொள்ளும். கிராமம் பயப்படும். வழக்கு மன்றங்கள் காகிதச் சாட்சியங்களுக்குச் செவி கொடுக்கும். சந்தர்ப்பங்கள் தோள்களை அழுத்தத் தீர்ப்புகள் எழுதப்படும்.

மீண்டும் மீண்டும் இதேதான். பணமோ பலமோ இல்லாதவன், நடந்து கொள்ள வேண்டிய பக்குவம் பற்றி ஆற்றங்கரையிலும் திண்ணைகளிலும் பேசப்படும்.

மங்கலட்சுமி வாயைப் பொத்திக் கொண்டிருந்தவள் தன்னை மீறி 'பேபேபே..' என்று கத்தத் தொடங்கினாள்.

''ஏன் சார்... இன்னா இது படா ரோதனையாப் போச்சு. இது இன்னா போலீஸ் ஸ்டேஷனா இல்லே சத்திரம் சாவடியா?'' என்று கான்ஸ்டபிள் குரல் கொடுத்தார்.

இன்ஸ்பெக்டர் அவனை நிமிர்ந்து பார்த்தார்.

''அந்தம்மாவை வெளியே கூட்டிட்டுப் போயிடு. அவங்களாலே கண்ட்ரோல் பண்ண முடியலே.''

அவளை வெளியே அழைத்து வரும் போது, அந்தப் பந்தயம் உதித்தது. மௌனமாக; உறுதியாக; இதன் முடிவு என்று இறுதி வரை சென்று பார்த்து விட வேண்டும் என்ற வைராக்கியமாக!

கௌதம் ஸ்டேஷனுக்கு வெளியில் வந்து சிவப்பு வர்ணம் அடிக்கப்பட்ட அந்தக் கட்டடத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

அவனை அலைக்கழித்த உணர்ச்சிகள் அகன்றிருந்தன. பொறுமையும் ஒரு தார்மீக சினமும் பின்னிப் பிணைந்த ஒரு பயம் அவனுள் வேர் பாய்ந்தது. தானே தனக்குப் புதியவன் போல் கௌதம் உணர்ந்தான்.

மீண்டும் மத்தியானம் அவன் ஸ்டேஷனுக்குப் போனான். இன்ஸ்பெக்டர் வீட்டில் இருப்பதாகச் சொன்னார்கள்.

வீட்டிலிருந்து வரும் வரை காத்திருக்கலாமா என்று யோசித்தான். இல்லை. வேண்டாம். ஊரே நடுங்குகிற அந்த இன்ஸ்பெக்டரின் மனசில் இருக்கிற நேர்மையைச் சந்திக்க வேண்டும். அது ஸ்டேஷனில் சாத்தியமில்லை.

கௌதம் அவர் வீட்டுக்குப் போனான்.

கதவு பாதி திறந்திருந்தது.

கௌதம் உள்ளே போகத் தயங்கினான். வெளியிலிருந்து காலிங் பெல்லை அழுத்தினான்.

''யாரது?'' என்று குரல் கனமாக வந்தது.

''கௌதம்.''

''கம் இன்.''

இன்ஸ்பெக்டர் சீருடை அணிந்து ஷூவைக் காலில் நுழைத்துக் கொண்டிருந்தார்.

அவன் நின்றான்.

''என்ன கௌதம்?''

''பேசணும்.''

''உட்கார்.''

அவன் உட்கார்ந்தான்.

''என்ன விஷயம்?''

''ஆதி கேஸ்.''

இன்ஸ்பெக்டர் நிமிர்ந்து சலனமின்றி அவனைப் பார்த்தார்.

''பெய்ல்ல எடுக்கப் போறியா?''

''முடிஞ்சா.''

''முடியற மாதிரி தெரியலே.''

கௌதம் அமைதியாகத் தன்னைப் பார்ப்பதைக் கவனித்தவாறே இன்ஸ்பெக்டர் சொன்னார்.

''அவன் கேஸ் நான்பெய்லபிளா ஆயிடும்.''

கௌதம் ஒன்றும் சொல்லவில்லை.

''சாட்சியங்கள் ரொம்ப பலமா இருக்கு. நீயே கூட ஒரு சாட்சியாக வேண்டி வரலாம்.''

''நான் காலையிலேயே சொல்லிட்டேன் சார்.''

இன்ஸ்பெக்டர் ஷூ லேஸுக்கு முடிச்சுப் போட்டு விட்டு நிமிர்ந்தார்.

''அது முழு உண்மையில்லே.''

அவன் இமைக்காமல் இன்ஸ்பெக்டரைப் பார்த்தான்.

''ஈவிட் நாட்?'' அவர் மேஜை மேல் வைத்திருந்த தொப்பியை எடுத்துத் தலையில் அணிந்தவாறே கேட்டார்.

''ஆதி இந்தக் குற்றத்தைச் செய்யலே சார். அதுதான் ஒரே உண்மை''



''இது உன் நம்பிக்கை. அவ்வளவு தானே!''

''ஆதிக்கு மாசிலா மேலே குடிசையைக் கொளுத்தி அவனைச் சாம்பலாக்குகிற அளவு பகையில்லே சார்.''

''ஐ'ம் சாரி கௌதம்.''

''ப்ளீஸ்... நான் சொல்லி முடிச்சுட றேன்.''

''கம் ஆன்.''

''மாசிலா செத்துப் போன்னா ஆதி குடுத்த ஆயிரம் ரூபாய்க்கும் வழியே இல்லே. அவன் செத்தா நஷ்டம்தானே தவிர, அவனுக்கு லாபம் இல்லே.''

இன்ஸ்பெக்டரின் பார்வை மின்னிற்று.

''மாசிலா செத்தா வேற யாருக்காவது லாபம் இருக்கலாம். நிச்சயமா ஆதிக்கு இல்லே. அவன் மரணம் இவனுக்கு நஷ்டம். அது கடன் வாங்கிக் கொடுத்த பணம். துபாய்க்குப் போக, ஏதோ தொழில் செஞ்சு முன்னுக்கு வந்து நாலு காசு சம்பாதிச்சு நாலு பேர் மாதிரி ஒரு கல்யாணம், பண்ணிக் கிற ஆசையிலே வட்டிக்கு வாங்கிய பணம்.''

''நீ உணர்ச்சிவசப்படறே கௌதம்.''

அவன் நிதானமானான்.

''இல்லே சார்! அந்த உண்மை என்னை ரொம்பத் தாக்குது.''

இன்ஸ்பெக்டர் சுவரில் தொங்கிய போட்டோவைப் பார்த்தார்.

படத்தில் அவர் பக்கத்தில் பிலோமினா சிரித்துக் கொண்டு நின்றாள். அவர் பார்வை அங்கு ஒரு சில விநாடிகளுக்கு மேல் நிலைத்ததால் கௌதமும் முகம் திரும்பி அந்த போட்டோவைப் பார்த்தான்.

''நிரூபிக்கிற வரையிலேயும் எதுவும் உண்மை இல்லே கௌதம்!''

''புரியுது சார்.''

''ஆதி இதைச் செய்யலேன்னா வேற யார் இதைச் செய்தது? இதுதான் கேள்வி. உனக்கு யார் மேலேயாவது சந்தேகமா? ஒரு கம்ப்ளெய்ண்ட் எழுதிக் கொடு. அது நம்பகமா, நிரூபிக்கக் கூடியதா இருந்தால் நாங்க ஆக்ஷன் எடுப்போம்.''

கௌதம் அவர் மேலே பேசட்டும் என்று முகம் பார்த்தான்.

''உன் இண்ட்ரஸ்ட் எனக்குப் புரியிது கௌதம். அதனாலதான் ஒங்கிட்டே இப்பிடிப் பேசிட்டிருக்கேன்.''

மேஜை மேலிருந்த சிகரெட் பெட்டியை எடுத்து ஒன்றை உருவிப் பற்ற வைத்தார். புகை விட்டவாறே மீண்டும் தொடர்ந்தார்.

''ஐ நோ யூ, கௌதம்! பிலோமினா சொல்லியிருக்கா. நீ வித்தியாசமானவன்னு.''

மீண்டும் நிறுத்திச் சிகரெட்டை உறிஞ்சினார்.

''பட்... நீ இன்னும் இளைஞன். உனக்குத் தெரியாது. உலகம் பொல்லாதது. கரப்டட். அழுகலின் உச்சிக்குப் போயாச்சு. கரப்டட் டு த கோர்.''

கௌதம் குறுக்கிட்டான்.

''இதை நீங்க சொல்றது ரொம்ப அதிர்ச்சியா இருக்கு சார்.''

''யார் சொன்னால் என்ன? அதுதான் உண்மை.''

''சொல்றது யாருங்கறதும் உண்மையைப் பொறுத்த அளவிலே ஒரு முக்கியம் இல்லையா சார்?''

கேள்வி நுட்பமானது. சிகரெட் சாம்பலை உதிர்த்து விட்டு, இன்ஸ்பெக்டர் அந்தக் கேள்வியின் கூர்மையை வாங்கிக் கொள்வதைப் போல அவனைப் பார்த்தார். அந்தப் பார்வையில் அகழி, மதில், அரண் என்ற காபந்துகள் விலகிய ஒரு நேசம் புலப்பட்டது.

''இது ஒரு பாராட்டுன்னு நெனைக்கிறேன். தாங்க் யூ ஃபார் த காம்ப்ளிமெண்ட். ஒரு போலிஸ் ஆபீசருக்கு ஜனங்களின் பயம்தான் ஒரே பாராட்டு.''

''நேர்மை?''

''நீ எங்கிட்டே ரொம்ப சுதந்திரம் எடுத்துக்க முயற்சி பண்றே?''

''ஸாரி சார்! இந்தக் கிராமத்தின் பார்வையிலே ஒங்களைப் பார்க்கிறேன்.''

''இது முகஸ்துதி.''

''எனக்கு ஒரு காரியமும் உங்ககிட்டே இருந்து ஆக வேண்டியதில்லையே!''

''தட்ஸ் ரைட்! ஜனங்களின் பயம்தான் எதையோ நேர்மைன்னு தீர்மானிக்குது. பயம் தீர்ந்துட்டா மௌஸ் போயிடுது. நேர்மையே கூட நேர்மை இல்லாம தோணுது.''

கௌதம் இன்ஸ்பெக்டரின் மன ஓட்டத்தைக் கணிக்க முயன்று மௌனமானான்.

''கௌதம், கர்த்தர் ஒருவரைத் தவிர மனுஷன் எவனும் நேர்மையா இருக்க முடியாது.''

சரக்கென்று அந்த வாக்கியம் கௌதமின் மனத்தில் பாய்ந்தது. எனினும் அவன் விட்டுக் கொடுக்க விரும்பவில்லை.

''நேர்மையாக இருக்க முயற்சி செய்வது முக்கியம்தானே சார்!''

''அதான் சொல்லிட்டேனே! யூ ஆர் டு யங் என்று.''

அது எச்சரிக்கை போன்று வந்த அனுதாபம்.

''அப்போ ஆதி விஷயம்?''

''வேற ஒரு குற்றவாளி நிரூபிக்கப்படுகிற வரைக்கும் அவன் குற்றம் சாட்டப்பட்டவன்தான்.''

''பெய்லில் எடுக்க முடியாதா சார்?''

''சந்தேகம்தான்.''

''நான் முயற்சி செய்யலாமா?''

''ஓ எஸ்... தாராளமா. மாஜிஸ்திரேட்டைக் கேட்டுப் பார்.''



●● நன்றாய் எழுதிய வாழ்க்கை வரலாறு, நன்றாய் வாழ்ந்த வாழ்வைப் போலவே அரியதாகும்.

— கார்லைல்.

●● தாய்நாட்டை நேசிப்பது இயல்பு; மனித குலம் முழுவதையுமே நேசிப்பது சிறப்பு.

— பதூராவி மதச் சொன்னை.

●● "உன்னையே நீ தெரிந்து கொள்" என்கிற பொன்மொழி அவ்வளவு சரியல்ல. "பிறரை நீ புரிந்து கொள்." என்பதே இன்னும் பொருத்தமானது.

— மினாண்டர்.

தொகுப்பு: எம். கதிர்வேல்.

அவன் இன்ஸ்பெக்டருக்கு வணக்கம் சொல்லிவிட்டு வெளியே வந்தான்.

எங்கே போவது என்று தெரியவில்லை. யாரைச் சந்திப்பது என்றும் புரியவில்லை. பந்தயம் மட்டும் மனசுக்குள் துவங்கி விட்டிருந்தது. பொய்க்கும், மெய்க்கும், நீதிக்கும், அநீதிக்கும், பகைமைக்கும் அன்புக்கும், சுயத்திற்கும் பொதுவிற்குமான பந்தயம். ஓய்வு ஒழிவின்றி உலகம் தோன்றி மனிதன் உதித்ததிலிருந்து நடக்கும் பந்தயம்.

கௌதமுக்குக் குயில்தோப்புக்குப் போக வேண்டும் போலிருந்தது.

மனசு குழம்பினால், கையும் காலும் களைத்தால், நெஞ்சில் பளு அழுத்தினால் கௌதம் அங்கே போவான். குளுகுளுவென்று வாரிக் கொண்டு வரும் காற்று. குயிலோசைத் தாலாட்டு.

ஏறிச் சுமைதாங்கியில் படுத்தால் காலம் நின்றுவிடும். ஒரு யுகத்திலிருந்து மறு யுகத்திற்குப் போகிற மாதிரி ஆழ்ந்த நித்திரை. விழித்து எழுந்தால் பொட்டும் உமியுமாக மனசில் குவிந்த கவலைகளை குயில் தோப்புக் காற்று அடித்துச் சென்றிருக்கும்.

சைக்கிளை நிறுத்திப் பூட்டிவிட்டுப் படுத்தவனுக்கு, எவ்வளவோ நேரம் ஆன பிறகு பகல் கனவில் 'கிணு கிணு'வென்று இடை விடாமல் சைக்கிள் மணியோசை.

அவன் உறக்கம் கலையாமலேயே கேட்டுக் கொண்டிருந்தான்.

மீண்டும் சைக்கிள் மணியோசை.

விழித்தான்.

சைக்கிள் கேரியரில் ஒரு எவர்சில்வர் தூக்கு தென்பட்டது. நிமிர்ந்தான். நித்யா.

எழுந்து உட்கார்ந்தான்.

"ஏய்... என்ன இங்கே இந்நேரத்திலே?"

"அன்னவாசலுக்குப் போய்ட்டு ஆத்துக்குக் குறுக்கே எறங்கி நடக்கலாம்னு வந்தேன். பாத்தா உன் சைக்கிள்."

"அன்னவாசல்லே என்ன விசேஷம்?"

"சித்தி வீட்டாருதுதானே கரும்பு ஆலை ஆடிட்டிருக்கு. ரொம்ப நாளாக் கூப்பிட்டுக்கிறு இருந்தாங்க. இன்னிக்குத்தான் அப்பா வாம்மா போகலாம்னு சைக்கிள்ளே ஒக்கார வச்சுக்கிட்டுப் போனாரு?"

"அவர் எங்கே?"

"நீ நேரா குயில் தோப்புக்கா போ! அங்கே பலான ஆளு படுத்திருக்கும். பேச்சுக் குடுத்துக்கிட்டே இரு. நான் ஏழெட்டுப் பேரை அழைச்சுக்கிட்டு வர்றேன். இன்னிக்கு செமத்தியா ஒரு மண்டகப்படி நடத்திடலாம்னு சொன்னார்."

அவள் சிரிக்காமல் சொன்னாள்.

"ஆக வர லேட்டாகும்னு சொல்லு!" அவனும் சிரிக்காமல் கேட்டான்.

"அவ்வளவு ஒண்ணும் லேட்டாகாது."

"அப்ப இருந்து வாங்கிட்டே போகலாம். வாங்கறதுதான் வாங்கறேன். எதுக்கு வேஸ்ட்டா வாங்கணும்?" என்று சரேலென்று அவன் சற்றும் எதிர்பாராமல் கீழே குதித்து அவளை நெருங்கினான்.

சிறிது தடுமாறிய நித்யா சட்டென்று பின் வாங்கினாள். அவள் முகத்தில் விருப்பத்துக்கு விரோதமான ஒரு தற்காப்புக் குறி.

கௌதம் முன்னேறாமல் நின்றான். அவளையே பார்த்தான்.

"இந்த இடத்திலே ஒன்னை என்ன வேணும்னாலும் பண்ணலாம். கேக்கறதுக்கு ஆளில்லே!"

உதடுகளை இறுக மூடிக் கொண்டு அவனை நினைவு தப்பியவன் முகத்தில் தண்ணீர் அடிக்கிற மாதிரி அவள் ஒரு முறை முறைத்தாள்.

"உன்னால ஒண்ணும் செய்ய முடியாது, கௌதம்!" என்று உறுதியாகச் சொன்னாள்.

"நீ எதிர்ப்பியா?"

"நான் இல்லே. நீயே அதை எதிர்ப்பே!"

"எப்படிச் சொல்றே?"

"நீ சந்தர்ப்பங்களை உபயோகிச்சுக்கிற ரகம் இல்லே. கனவான்!"

அந்தச் சொல் அவனைத் துளைத்தது. அவனுக்குள் எங்கோ இருந்த மேன்மையைத் தீண்டிப் பெருக்கெடுத்துப் பரவச் செய்தது.

"ஒரு தற்காப்புக்காகச் சொல்றே நித்யா!"

"இல்லே கௌதம். எனக்கு உன்கிட்டே பயம் இல்லே. மரியாதை இருக்கு. மட்டம் தட்டறேன். சமயத்திலே திட்டறேன். வெளையாடறேன். ரொம்ப உரிமை எடுத்துக்கறேன். ஆனா உள்ளார ஒரு மரியாதை இருந்துக்கிட்டே இருக்கு. நீ வேற என்னவோ கௌதம்!" என்றாள். அவள் குரல் கனத்திருந்தது.

(தொடரும்)

# தேடல்

நுகர்வோர் மத்தியில் புகழோடு விளங்கிய அந்த நிறுவனத்தின் வரவேற்புக் கூடத்தில் கூட்டமாக இளைஞர்கள்.

பொறுப்பான ஒரு வேலைக்கான எழுத்துத்தேர்வை முடித்துவிட்டு, வெளியே வந்த ரகு, ஏற்கெனவே எழுதிமுடித்து வெளியே காத்து நின்ற அருணை நெருங்கினான்.

''எப்படி எழுதியிருக்க?''

''நாட் பேட். மூணு கேள்விகள்தான் மிஸ் பண்ணிட்டேன். எவ்வளவோ யோசிச்சும் ஆன்சர் தெரியலை. நீ?''

''நானும் சொல்லிவச்ச மாதிரி உன்னைப் போலவே மூணு கேள்விகளை விட்டுட்டு வந்துட்டேன்.'' வருத்தப்பட்டான் ரகு.

''பரவாயில்லை விடு. டேக் இட் ஈஸி.''

''லைப்ரரி போய் பதில் கண்டுபிடிக்கலாம் வர்றியா?'' அழைத்தான் ரகு.

''ஆமா, நீ கண்டுபிடிச்சதும் உன்னைக் கூப்பிட்டு வேலை தரப்போறான் பாரு. பேசாம வாடா ரிலாக்ஸ்டா சினிமா போகலாம்.''

''இல்லேடா அருண். அந்த மூணு கேள்விகளுக்கும் எனக்கு உடனே விடை தெரிஞ்சாகணும்.''

''இல்லைன்னா, உன் மண்டை வெடிச்சுடுமே?'' — கேலி செய்தபடி மொபட்டை உதைத்தான் அருண். ''சரியான சாவு கிராக்கிடா நீ.''

''என்னைக் கன்னிமாராவுல இறக்கிடேன்!''

''நடந்து போ. அப்பத்தான் உனக்குப் புத்தி வரும்.'' — திரையரங்கம் நோக்கி விரைந்தான் அருண்.

மறுநாள் அதே நிறுவனத்தின் நேர்முகத்தேர்வு அறைக்குள் நுழைந்த அனைவரும் வெளியே திரும்பியபோது சோகம் வாங்கி வந்தனர்.

அருணும் அப்படியே.

வாடிய முகத்தோடு வந்தவனை நெருங்கி, விசாரிக்க முயல்வதற்குள், இறுதிப் பெயராகத் தன் பெயர் அழைக்கப்படவே, உள்ளே விரைந்து சென்றான் ரகு.

சூட் அணிந்த அதிகாரி, ''பி ஸீட்டட் ஜென்டில்மேன்.'' என்றார்.

''தாங்க் யூ சார்,'' என அமர்ந்தவனின் பார்வை, மேசை மீது படிய, அதிகாரியின் முன் தனது எழுத்துத் தேர்வின் விடைத்தாள் இருப்பது கண்டான் ரகு.

அதைப் புரட்டி மேய்ந்த அதிகாரி இறுதியாக, ''ஸோ, மூன்று கேள்விகளுக்குப் பதில் தெரியலை?''

''இப்பத் தெரியும் சார்.''

''ரியலி? சொல்லுங்க பார்க்கலாம்?''

மூன்று பதில்களையும் மிகச் சரியாகக் கூறி, அதிகாரியின் முகத்தை மலர வைத்தான் ரகு.

''குட் மிஸ்டர் ரகு. புதுசா எதுவும் கேட்காம, எழுத்துத் தேர்விலே கேட்கப்பட்ட கஷ்டமான இந்தக் கேள்விகளை மட்டுமே நேர்முகத் தேர்விலே எல்லாரையும் நான் கேட்டேன். ஆனால் யாருமே ஆன்சர் பண்ணலை, உங்களைத் தவிர! அதாவது, நீங்க மட்டுமே பதில்களைத் தெரிஞ்சுக்கணும்ங்கிற ஆர்வத்தோட செயல்பட்டு இருக்கீங்க. ஆம் ஐ கரெக்ட்?''

''எஸ் சார்,'' என அடக்கத்தோடு ஆமோதித்தான் ரகு.

''மிஸ்டர் ரகு, எங்க கம்பெனி முன்னுக்கு வந்துக்கிட்டிருக்கிற ஒரு புதிய நிறுவனம். ஸோ, இங்கே நிறையப் பிரச்னைகள் எழ வாய்ப்பிருக்கு. காலத்தை வீணாக் கடத்திட்டு, சம்பளத்துக்காகக் கைநீட்டறவங்களால் இந்த நிறுவனத்துக்கு எந்தப் பிரயோஜனமும் இல்லை. தேடல் ஆர்வம் மிகுந்த உங்களைப் போன்ற துடிப்பான இளைஞர்களால மட்டுமே பிரச்னைகளுக்கான சரியான தீர்வை அலசி ஆராய்ந்து நிறுவனத்தை நிலைநிறுத்த முடியும். ஸோ, யூ ஆர் அப்பாய்ண்டட்,'' என்று மகிழ்ச்சியோடு கைநீட்டினார், அதிகாரி!



இராஜா பாலச்சந்தர்

# பொன்னியின் செல்வன்




அத்தியாயம் 65

## "ஐயோ பிசாசு!"

ஆழ்வார்க்கடியான் அது வரை மறைந்திருந்த தன் ஆட்களைத் திரட்டிச் சேர்த்துக் கொண்டு தஞ்சைக் கோட்டையின் வடக்கு வாசலை நோக்கி நடந்தான். கருத்திருமனுடன் அவன் துவந்த யுத்தம் செய்த போது தன் ஆட்களை அழையாததின் காரணத்தை வாசகர்கள் ஊகித்து உணர்ந்திருப்பார்கள்.

அவன் நிச்சயமாகத் தெரிந்து கொள்ள விரும்பிய மிக முக்கிய இரகசியமான விவரங்கள் மற்றவர்கள் காதில் விழுவதை அவன் விரும்பாததில் வியப்பில்லை அல்லவா?

பாதி தூரம் சென்ற பிறகு, எதிரே ஒரு தனி ஆள் வெறி கொண்டவனைப் போல் ஓடி வருவதைக் கண்டான். அப்படி ஓடி வந்தவன் இருட்டில் ஆழ்வார்க்கடியான் மீது முட்டிக் கொண்டு, பின்னர் மறுபடியும் ஓடப் பார்த்தான். திருமலை நம்பி அவனை விடாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான். முகத்தை உற்றுப் பார்த்து விட்டு "அடேடே! வைத்தியர் மகனா? எங்கே அப்பா இப்படித் தலை தெறிக்க ஓடுகிறாய்?" என்று கேட்டான்.

"ஓகோ! வீர வைஷ்ணவனா? பேயோ, பிசாசோ என்று பயந்து போனேன். நல்லது; நீ எத்தனை தூரத்திலிருந்து இக்கரையோடு வருகிறாய்? எதிரே இரண்டு குதிரைகள் மீது இரண்டு ஆட்கள் போனார்களா?" என்றான்.

"ஆமாம்; போனார்கள்! அவர்களைப் பற்றி உனக்கு என்ன?"

"எனக்கு என்னவா? நல்ல கேள்வி! அவர்கள் யார் என்று தெரிந்தால் நீ இப்படிப்பட்ட கேள்வி கேட்க மாட்டாய்! ஆமாம்; அவர்களில் ஒருவனையாவது உனக்கு அடையாளம் தெரியவில்லையா?"

"ஒருவன் மட்டும் எனக்குத் தெரிந்த ஆள் மாதிரி தான் தோன்றியது. ஆனால்....."

"யார், யார்? யார் மாதிரி தோன்றியது?"

"வந்தியத்தேவனைப் போலத் தோன்றியது. அப்படியிருக்க முடியாது என்று தீர்மானித்துக் கொண்டேன்."

"அட பாவி! அப்படியா தீர்மானித்தாய்? அவன் சாட்சாத் வந்தியத் தேவன்தான்!"

"என்னப்பா, உளறுகிறாய்? வந்தியத்தேவன் பாதாளச் சிறையில் அல்லவோ இருந்தான்?"

"இருந்தான்; ஆனால், இப்போது இல்லை! வந்தியத்தேவனும் இன்னொரு பைத்தியக்காரனும் சிறையிலிருந்து தப்பி விட்டார்கள். என்னைக் கட்டிப் போட்டு விட்டு அவர்கள் ஓடி விட்டார்கள்!"

அமரர் கல்கி

"அடேடே! நல்ல வேலை செய்தார்கள்! அவர்கள் உன்னைக் கட்டிப் போடும் போது உன் கைகள் என்னப்பா, செய்து கொண்டிருந்தன? முதலில், பாதாளச் சிறைக்கு நீ எதற்காகப் போனாய்?"

"முதன் மந்திரியின் கட்டளையின் பேரில் போனேன். அதையெல்லாம் இப்போது சொல்லிக் கொண்டிருக்க நேரமில்லை. நீயும் முதன் மந்திரியிடம் சேவகம் செய்கிறவன்தானே? என்னுடன் வா! அவர்களைப் பிடித்துக் கொண்டு வரலாம்...."

"எதற்காக அவர்களைப் பிடித்துக் கொண்டு வர வேண்டும்? ஓடிப்போனால் போகட்டுமே? உனக்கும் எனக்கும் அதனால் என்ன வந்தது?"

"முதன் மந்திரி நல்ல ஆளைப் பிடித்து வைத்திருக்கிறார்! உன்னைப்போல் எல்லாரும் இருந்தால் இந்தச் சோழ ராஜாங்கம் உருப்பட்டாற் போலத்தான்! வந்தியத்தேவன் இளவரசர் கரிகாலரைக் கொன்றதாகக் குற்றஞ் சாட்டப்பட்டவன் என்பது உனக்குத் தெரியாதா? அது மட்டுமல்ல; சற்று முன்னால் சேந்தன் அமுதன் குடிசைக்கு அருகில் இன்னொருவனையும் அவன் ஈட்டியால் குத்தி விட்டு ஓடி வந்து விட்டான்....."

"தெய்வமே! இது என்ன? அங்கே குத்தப் பட்டவன் யார்?"

"அது யார் என்று நான் பார்க்கவில்லை. வந்தியத் தேவனைத் தொடர்ந்து நான் ஓடி வந்தேன்.... சரி, சரி! நீ என்னுடன் வரா விட்டால் போ! வழியை மறிக்காதே! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும்! என்னை விடு!"

"வைத்தியர் மகனே! இந்த உலகத்தில் நான் எத்தனையோ மூடர்களைப் பார்த்திருக்கிறேன். அவர்கள் எல்லாரையும் நீ தூக்கி அடித்து விட்டாய்! அவர்கள் குதிரையின் மேல் போகிறார்கள். சாவுக்குத் துணிந்து தப்பி ஓடுகிறார்கள். நீ ஒருவன், கால் நடையாகத் தேடிப் போய் அவர்களைப் பிடித்து விடுவாயா? எனக்கு என்ன அதைப் பற்றி? போ! போ!"

"நீ சொல்வது உண்மைதான். அதனாலேயே உன்னையும் துணைக்கு வரும்படி கூப்பிட்டேன். நீ வர மறுக்கிறாய்?"

"நான் வந்து என்ன செய்கிறது? அவர்களைத் தடுத்து நிறுத்தப் பார்த்தேன். ஒருவன் கையிலிருந்த தடியினால் நன்றாய்ப் போட்டான். வாங்கிக் கொண்டு வந்தேன். இன்னும் அந்த வலி தீரவில்லை. எனக்கு அவ்வளவாகச் சண்டை போட்டுப் பழக்கம் இல்லை. நீ ஒரு வேளை...... ஆமாம்; உன் கையில் என்ன? இரத்தக்கறை மாதிரி அல்லவா இருக்கிறது?"

"சிறையிலே அவர்கள் என்னைத் தாக்கிக் காயப்படுத்தி விட்டார்கள். பொல்லாத ராட்சதர்கள்!"

"பின்னே, அந்த இராட்சதர்களைத் தொடர்ந்து கால்நடையாகத் தனியே போகிறாயே? சிறையில் அடைக்கப்பட்டிருந்த போதே அவர்கள் உன்னை இந்தப் பாடுபடுத்தியிருக்கும் போது...."

"அப்படியானால், என்னதான் செய்யச் சொல்லுகிறாய்?"

"நான் உன்னை ஒன்றும் செய்யச் சொல்லவில்லை. என் பேரில் எதற்காகப் பழிபோடுகிறாய்? நான் உன் நிலைமையில் இருந்தால், திரும்பிப் போய் யாரிடமாவது தக்க மனிதர்களிடம் சொல்லி ஐந்தாறு குதிரை வீரர்களையாவது துணைக்கு அழைத்துக் கொண்டு திரும்பவும் மனித வேட்டைக்குப் புறப்படுவேன். நானும் குதிரைமேல் ஏறிக் கையில் வேலும் வாளும் எடுத்துக் கொண்டுதான் கிளம்புவேன்....."

வைத்தியர் மகன் சிறிதுயோசனை செய்தான். சேந்தன் அமுதனுடைய குடிசைக்கருகில் யாரோ ஒருவனைக் குத்திப் போட்டு விட்டு அவன் ஓடிவந்திருக்கிறான். ஒரு வேளை இராஜ குலத்தைச் சேர்ந்த மதுராந்தகராயிருக்கக் கூடும் என்ற நினைவு அவனுக்குக் கதிகலக்கத்தை உண்டாக்கியது. ஆனால் இந்த வைஷ்ணவன் சொல்வது போல் தனியாகக் கால் நடையாகச் செல்வதிலும் பொருள் இல்லை. அப்படி நந்தவனக் குடிசையருகில் தன் குத்தீட்டியினால் விழுந்தது மதுராந்தகத் தேவராக இருக்கும் பட்சத்தில் அந்தக் குற்றத்தையும் வந்தியத்தேவன் பேரில் போடுவதுதான் நல்லது. ஓர் இளவரசரைக் கொன்றவன் இன்னொரு இளவரசரையும் கொல்லலாம் அல்லவா? தண்டனை இரண்டுக்கும் ஒன்றுதானே?.... இதை நினைத்தபோது, பினாகபாணி, 'இரண்டு இளவரசர்களையும் கொன்றவன் வந்தியத்தேவன்தான்!' என்றே நம்பத் தொடங்கி விட்டான்.

"வைஷ்ணவனே! நீ சொல்வது என்னவோ சரிதான். நான் உன்னோடு வருகிறேன். நீ எனக்கு உதவி செய்ய வேண்டும். யாராவது தக்க மனிதரிடம் சொல்லி என்னோடு குதிரை வீரர்களை அனுப்பச் சொல்ல வேண்டும். பெரிய மனிதர்களின் சுபாவம் எனக்கு என்னமோ பிடிபடுவதில்லை. அவர்களுடன் எப்படிப் பழகுவது என்றும் தெரியவில்லை. இதோ பார்!

நான் சேநாதிபதி கொடும்பாளூர் வேளாரிடமும் முதன் மந்திரி அன்பில் அநிருத்தரிடமும் சொல்லிப் பார்த்தேன். ஓடிப் போனவர்களைத் திரும்பப் பிடிக்க வேண்டியதைப் பற்றித்தான். சில வீரர்களை என்னுடன் அனுப்பும்படி வேண்டினேன். இரண்டு பேரும் என்னை முட்டாள், மூடன் என்று திட்ட ஆரம்பித்து விட்டார்கள். அவர்களுடைய நோக்கம் என்னவென்று எனக்குத் தெரியவில்லை......''

''நோக்கம் வேறு என்ன? உன்னிடம் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. உன்னிடம் இக்காரியத்தை ஒப்புவிக்க அவர்கள் விரும்பவில்லை. சிறைக்குள்ளேயே ஏமாந்து சிறையிலிருந்தவர்கள் தப்பி ஓடும்படி விட்டு விட்டாய், அவர்களை எங்கே பிடிக்கப் போகிறாய் என்று நினைத்திருப்பார்கள்.....''

''அவர்களுடைய நினைவைப் பொய்ப்படுத்த எண்ணித்தான் தனியாகவாவது போகலாம் என்று கிளம்பினேன். எப்படியும் கோடிக் கரையில் அவர்கள் நின்று தானே ஆக வேண்டும்? அங்கே வந்தியத்தேவன் ஒளிந்திருக்கக் கூடிய இடங்களெல்லாம் எனக்குத் தெரியும். அங்கே எனக்கு உதவி செய்யக்கூடியவர்களும் இருக்கிறார்கள்.....''

''அப்படியானால், போ! உன் சாமர்த்தியத்தைப் பார்!''

''இருந்தாலும், குதிரை மேலேறி இன்னும் சிலரையும் அழைத்துக் கொண்டு போனால் நல்லதுதான். நீ அதற்கு உதவி செய்வாயா?''



தற்குள் அவர்கள் இருவரும் வடக்குக் கோட்டைப் பெரிய வாசலை நெருங்கி வந்து விட்டார்கள்.

இராஜபாட்டையில் வடக்கே சற்றுத் தூரத்தில் அம்பாரி வைத்த யானைகளும், குதிரைகளும், காலாள் வீரர்கள் பலரும் கும்பல் கும்பலாக வந்து கொண்டிருந்தது தெரிந்தது.

கோட்டை வாசலிலும் ஒரு கும்பல் நின்றது. தீவர்த்திகளின் வெளிச்சத்தில் கொடும்பாளூர் வேளாரும் திருக்கோவலூர் மலையமானும் முதன் மந்திரி அநிருத்தரும் நிற்பது தெளிவாகத் தெரிந்தது.

''உனக்கும் எனக்கும் எஜமானர் அதோ கோட்டை வாசலில் நிற்கிறார். அவரிடம் போகலாம், வருகிறாயா?''

வைத்தியர் மகன் தயங்கினான்.

''நான் ஒரு தடவை கேட்டாகி விட்டது. பயன்படவில்லை. ஒருவேளை நீ இரண்டு பேர் தப்பி ஓடியதைப் பார்த்திருக்கிறபடியால் உன் பேச்சை நம்பினாலும் நம்பலாம். ஆனால் என்னை உடன் அனுப்பச் சம்மதிப்பாரா என்று சந்தேகிக்கிறேன்'' என்றான்.

''நீ சொல்வது உண்மைதான். மேலும் கோட்டை வாசலில் ஏதோ முக்கியமான காரியத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் இச்சமயம் போவதில் பயனில்லை. எது சொன்னாலும் அவர்கள் காதில் ஏறாது. இந்தப் பக்கம் பழுவேட்டரையர்கள் வருவதாகக் காண்கிறது. அவர்களுடன் சம்புவரையரும் வருகிறார். அதோ, பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் காணப்படுகிறார்கள். அவர்களிடம் சொல்லிப் பார்க்கலாம். வந்தியத்தேவனைப் பிடிப்பதில் அவர்களுக்குத்தான் அதிக சிரத்தை இருக்கும்!'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

ஊர்வலம் விரைவில் அவர்களை அணுகியது. முன்னால் கட்டியக்காரர்கள் பழுவேட்டரையர்களின் தொல்குலப் பெருமையையும், அம்மாதிரியே கடம்பூர் சம்புவரையர், மழபாடி மழவரையர், பார்த்திபேந்திர பல்லவன், நீல தங்கரையர், இரட்டைக் குடை இராஜாளியார் முதலியவர்களின் விருதுகளையும் வீரச் செயல்களையும் வரிசைக் கிரமமாகச் சொல்லிக் கொண்டு வந்தார்கள். இடையிடையே முரசுகள் முழங்கின; சங்கங்கள் ஆர்த்தன.

ஊர்வலத்தின் முன்னிலையில் சின்னப் பழுவேட்டரையரும் பார்த்திபேந்திரனும் கந்தமாறனும் வெண் புரவிகளின் மீது அமர்ந்து கம்பீரமாக வந்தார்கள். அடுத்தாற்போல் வந்த மத்தகஜத்தின் அம்பாரியில் பெரிய பழுவேட்டரையரும் சம்புவரையரும் அமர்ந்திருந்தார்கள். அவர்களுக்குப் பின்னால் மற்ற குறுநில மன்னர்கள் யானை மீதும் குதிரை மீதும் வந்தார்கள். முன்னும் பின்னுமாக ஏறக் குறைய நூறு வீரர்கள் கையில் வேலும் இடையில் வாளும் தரித்து நடந்து வந்தார்கள்.



ந்த ஊர்வலத்துக்கு முன்னால் ஆழ்வார்க்கடியானும் வைத்தியர் மகன் பினாகபாணியும் பாதை நடுவில் நின்றதைப் பார்த்ததும், சின்னப் பழுவேட்டரையர் தம் குதிரையைச் சிறிது நிறுத்தி ''வைஷ்ணவனே! முதன் மந்திரியிடமிருந்து முக்கியமான செய்தி ஏதேனும் உண்டா?'' என்று கேட்டார்.

''தளபதி! முதன் மந்திரி என்னிடம் செய்தி ஒன்றும் அனுப்பவில்லை. சொல்ல

வேண்டிய செய்தியைக் கோட்டை வாசலில் தங்களிடமே சொல்லுவார். ஆனால் முக்கியமான செய்தி ஒன்றிருக்கிறது....'' என்று ஆழ்வார்க்கடியான் நிறுத்தினான்.

''என்ன? என்ன? என்ன?'' என்று மூன்று பேரும் ஆவலுடன் கேட்டார்கள்.

''பாதாளச் சிறையிலிருந்து வந்தியத்தேவன் தப்பி ஓடிவிட்டான்....''

''அது எப்படி முடியும்? அவன் என்ன இந்திரஜித்தா மாயமாய் மறைந்து போவதற்கு?'' என்று கேட்டார் சின்னப் பழுவேட்டரையர்.



''இதில் ஏதோ சூழ்ச்சி இருக்கிறது. வேறு யாராவது அவனுக்கு ஒத்தாசை செய்திருக்க வேண்டும்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

''எல்லாம் அந்தக் கொடும்பாளூர்ப் பெரிய வேளாரின் வேலைதான்!'' என்றான் கந்தமாறன்.

''அப்படித் தப்பி ஓடினாலும் எங்கே ஓடிவிடுவான்? கோட்டைக்குள்ளே தானே இருக்க வேண்டும்?'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''அப்படித்தான் வேளார் சொல்லுகிறார். முதன் மந்திரி முன் ஜாக்கிரதையாக என்னைக் கோட்டையைச் சுற்றி வந்து பார்த்துக் கொள்ளும்படி பணித்தார். கடம்பூர் வம்சத்தின் மீது அபவாதம் எதுவும் ஏற்படக் கூடாது என்று முதன் மந்திரி கவலைப்படுகிறார்.....''

''அப்படிக் கவலையுள்ளவர் ஒருவராவது இருக்கிறாரே, அந்த வரைக்கும் மிகவும் திருப்தியான காரியம்'' என்று சொன்னான் கந்தமாறன்.

''வைஷ்ணவனே! உண்மையைச் சொல்! தப்பி ஓடுவதைத் தடுப்பதற்காக நீ சுற்றி வருகிறாயா? அல்லது உதவி செய்வதற்காகச் சுற்றி வருகிறாயா?'' என்று பார்த்திபேந்திரன் கேட்டான். அவனுக்கு வைஷ்ணவன் பேரில் எப்போதுமே சந்தேகம்தான்.

''ஐயா! வேறு சந்தர்ப்பமாயிருந்தால் தங்களுக்கு வேறுவிதமாகப் பதில் சொல்வேன். இப்போது நாம் சொந்தத்தில் சண்டை போடும் சமயம் அல்ல. இந்த வைத்தியர் மகன் பினாகபாணி, ஒரு விசித்திரமான செய்தியைக் கூறுகிறான். இரண்டு பேர் குதிரைகள் மீது ஏறிப் போனதாகவும் அவர்கள்தான் சிறையிலிருந்து தப்பி ஓடிய வந்தியத் தேவனும் கருத்திருமனும் என்று சொல்லுகிறான். இரண்டு பேர் குதிரை மேலேறி இந்தச் சாலை வழியாக விரைவாகப் போனதை நானும் பார்த்தேன்.''

''பினாகபாணி! இந்த வைஷ்ணவன் சொல்லுவது உண்மையா?'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

''சத்தியம், ஐயா!''

''பின்னே, உடனே போய் முதன் மந்திரியிடமாவது வேளாரிடமாவது சொல்லுவதற்கென்ன?''

''அவர்கள் இருவருக்கும் என்பேரில் அசாத்திய கோபம்.''

''எதற்காக?''

''அவர்களை நான்தான் தப்ப விட்டு விட்டேன் என்று.''

''அது எப்படி?''

''பாண்டிய குலக் கிரீடமும் இரத்தின ஹாரமும் இருக்குமிடம் தெரியுமென்று ஒரு பைத்தியக்காரன் பாதாளச் சிறையில் சொல்லிக் கொண்டிருந்தான் அல்லவா? அவனை அழைத்து வருவதற்காக அநிருத்தர் என்னை அனுப்பினார். அதற்காகப் போன இடத்தில் இரண்டு பேருமாகச் சேர்ந்து என்னைப் பாதாளச் சிறையிலே கட்டிப் போட்டு விட்டுத் தப்பி ஓடி விட்டார்கள்!''

''போயும் போயும் முதன் மந்திரிக்கு உன்னைப் போன்ற முட்டாள்தானா இந்தக்



காரியத்துக்கு அகப்பட்டான்?'' என்று கூறிவிட்டுப் பார்த்திபேந்திர பல்லவன் சிரித்தான்.

வைத்தியர் மகன் கோபமாக ''ஐயா! நீங்கள் சிரிப்பதற்காக நான் இங்கே வரவில்லை. உதவி செய்வதா விருந்தால், செய்யுங்கள்!'' என்றான்.

''என்ன உதவி கேட்கிறாய்?''

''என்னுடன் நாலு குதிரை வீரர்களை அனுப்புங்கள். எனக்கும் ஒரு குதிரை

மணியம்

கொடுங்கள். தப்பி ஓடியவர்களைப் பிடித்துக் கொண்டு வருவது என் பொறுப்பு. ஏற்கெனவே எனக்கு இட்ட காரியங்களை நான் நிறைவேற்றவில்லையா? தளபதி சின்னப் பழுவேட்டரையருக்குத் தெரியுமே?'' என்றான் வைத்தியர் மகன் பினாக பாணி.

''நீ என்ன சொல்லுகிறாய்?'' என்று சின்னப் பழுவேட்டரையர் பார்த்திபேந்திரனைக் கேட்டார்.

''அனுப்ப வேண்டியதுதான். சக்கரவர்த்தி உங்களைத் திரும்ப அழைத்து வரும் பொறுப்பை என்னிடம் ஒப்புவித்திருக்கிறார். இல்லாவிட்டால் நானே இவனுடன் போவேன். வந்தியத்தேவனைப் பிடிக்க வேண்டியது மிக முக்கியமான காரியம்'' என்றான் பார்த்திபேந்திரன்.

அச்சமயம் கந்தமாறன், ''அந்தப் பொறுப்பை என்னிடம் ஒப்புவியுங்கள். இவனுடன் நானும் போகிறேன். வந்தியத்தேவன் யமலோகத்தின் வாசலுக்குப் போயிருந்தாலும் அவனைத் திரும்பப் பிடித்துக் கொண்டு வருகிறேன்'' என்றான்.

சின்னப் பழுவேட்டரையரும் அதற்குச் சம்மதித்தார். சம்புவரையர் முதலியவர்களுக்குச் சமாதானம் சொல்லும் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டார்.

உடனே கந்தமாறனும் வைத்தியர் மகனும் மற்றும் வீரர்கள் நால்வரும் வடவாற்றின் கரையோடு விரைந்து செல்லக்கூடிய குதிரைகள் மீதேறி வாயு வேக மனோவேகமாகச் சென்றார்கள்.



துராந்தகன் குதிரை ஏற்றத்தில் அவ்வளவு பழக்கப்பட்டவன் அல்ல. கருத்திருமன் பழக்கப்பட்டவன் ஆன போதிலும், பாதாளச் சிறையில் நெடுங்காலம் இருந்தவனானபடியால், மிக்க உடற்சோர்வு உற்றிருந்தான். ஆயினும் இரண்டு பேருடைய உள்ளங்களிலும் இப்போது ஒரு புதிய உற்சாகம் பிறந்திருந்தது. உள்ளத்தின் பலத்தினால் தளர்ச்சியைச் சகித்துக் கொண்டு அவர்கள் பிரயாணம் செய்தார்கள்.

நள்ளிரவு வரையில் பிரயாணம் செய்த பிறகு இருவரும் நின்றார்கள். அங்கே நதிக்குக் குறுக்கே மூங்கில் கழிகளைச் சேர்த்துக் கட்டி அமைத்த பாலம் ஒன்று இருந்தது. எப்படியும் தங்களைப் பின் தொடர்ந்து பிடிக்க ஆட்கள் வருவார்கள் என்று கருத்திருமன் எதிர்பார்த்தான். ஆகையால், அந்த இடத்தில் நதியைக் கடந்து அக்கரை சேர்ந்து விடுவது நல்லது என்று எண்ணினான். நதியின் தென் கரையோடு சிறிது தூரம் சென்று பின்னர் கோடிக்கரைப் பாதையில் திரும்பிப் போகலாம்.

அங்கேயே நதியைக் கடப்பதற்கு இன்னொரு காரணமும் இருந்தது. மதுராந்தகனால் குதிரையைச் செலுத்திக் கொண்டு ஆற்று வெள்ளத்தைக் கடக்க முடியுமா என்று கருத்திருமன் ஐயமுற்றான். வெள்ளம் அதிகமாயிருந்தால் நிச்சயம் முடியாத காரியம். மதுராந்தகனைப் பாலத்தின் வழியாகப் போகச் சொல்லிவிட்டு இவனே இரண்டு குதிரைகளையும் ஒவ்வொன்றாக அக்கரை கொண்டு போய்ச் சேர்த்து விடலாம்.



ந்த யோசனைகளெல்லாம் மதுராந்தகனுக்கும் சம்மதமாயிருந்தது. நதி வெள்ளத்தில் இறங்குவதற்கு முன்னால் இருவரும் சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்து கொள்வதற்காக மரத்தடி வேரில் உட்கார்ந்தார்கள். ஆற்று வெள்ளம் 'சோ' என்ற சப்தத்துடன் ஓடிக் கொண்டிருந்தது. நாலாபுறத்திலிருந்தும் மண்டூகங்களின் குரல்கள் கிளம்பிக் காதைத் துளைத்தன. வானத்தில் விரைவாகக் கலைந்து சென்று கொண்டிருந்த மேகத் திரள்களுக்கு மத்தியில் விண்மீன்கள் எட்டிப் பார்த்து ஒற்றர் வேலை செய்து கொண்டிருந்தன.

பெரும்பாலும் அரண்மனைகளில் சப்ரமஞ்சக் கட்டில்களில் பஞ்சணை மெத்தைகளுக்கு மத்தியில் உறங்கிப் பழக்கமான மதுராந்தகனுக்கு நள்ளிரவில் ஆற்றங்

## அருள்வாக்கு

ஆத்மாபிவிருத்தியில் ஓரளவுக்கு மேலே போகப் போக மனஸின் ஒருமுகத் தியானத்துக்கு வாக்கு, காரியம் ஆகியவையே இடைஞ்சலாகத்தான் ஆகும். காரியம், ஸ்தோத்ரம், மந்திரம் எல்லாமே அப்போது நின்று போய்விடும். ஆனால் இது தானாகவே விட்டுப்போகிற ஸமாசாரம். தவளையை உதாரணமாகச் சொல்வது வழக்கம். தவளை ஜலத்தில் தான் முட்டை போடும். அப்புறம் முட்டையிலிருந்து வெளியே வந்துவிட்டும் சில காலம் மீன் மாதிரி ஜலத்தில் மட்டும்தான் இருக்கும். அந்த ஸ்டேஜில் அதற்கு நிலத்திலே ச்வாஸிப்பதற்கு வேண்டிய 'லங்ஸ்' கிடையாது. மீன் மாதிரி ஜலத்தில் கரைந்திருக்கிற ஆக்ஸிஜனைத் தனக்குள்ளே இழுத்துக் கொள்ளும் உறுப்பு (Gills) மட்டும்தான் அப்போது தவளைக்கு உண்டு. அப்புறம் தான் அது வளர வளர இந்த உறுப்பு எப்படி மறைந்தது என்றே தெரியாமல்



தானாக மறைந்து, அதற்கு நிலத்திலேயிருந்து கொண்டு காற்றிலேயுள்ள ஆக்ஸிஜனை ச்வாஸிக்கக் கூடிய 'லங்ஸ்' உண்டாகிறது. இப்படி ஹையர் ஸ்டேஜுக்குப் போகும்போது தானாகச் சடங்கு, மந்த்ரம் எல்லாம் நின்று போகும். அதற்காக ஆரம்பத்திலேயே இதெல்லாம் வேண்டாம், மனஸ் சுத்தம் போதுமென்றால், அது தவளை முதலில் ஜலத்திலிருந்த போதே லங்ஸ்தான் வேண்டும் என்று தனக்கு இருக்கிற ச்வாஸ அவயவத்தையும் விட்டுவிட்டு... விட்டால் என்ன ஆகும்? உயிரையும் விட வேண்டியதுதான்!

வெளிச் சின்னங்கள், வெளிக் கார்யங்கள், வெளி வித்தியாஸங்கள் இவற்றின் மூலம்தான் உள்ளே ஓர் அடையாளமும், காரியமும், பேதமும் இல்லாமல் ஆகிற நிலைமையை அடைய முடியும். முதலிலேயே கார்யத்தைக் கொடுக்காமல் மனஸை மட்டும் வைத்துக் கொண்டு தியானம் பண்ணு என்றால் மனஸ் ரொம்ப நேரம் கண்டபடி ஓடிவிட்டு, அப்புறம் எழுந்து விடத்தான் செய்யும், அல்லது களைத்துத் தூக்கத்தில் கொண்டு விடும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

கரையில் மரத்து வேர்களின் மீது உட்கார்ந்திருக்க நேர்ந்தது மிக்க மனச்சோர்வையும் வருங்காலத்தைப் பற்றிய பீதியையும் உண்டாக்கியது.

அவனுடைய மனோநிலையை உள்ளுணர்ச்சியினால் அறிந்து கருத்திருமன் அவனுக்குத் தைரியம் சொல்ல முயன்றான். இலங்கை மன்னன் மகிந்தன் பாண்டிய குலத்தின் பரம்பரைச் சிநேகிதன் என்றும், அவனிடம் மதுராந்தகன் போய்ச் சேர்ந்து விட்டால் பிறகு ஒரு கவலையுமில்லையென்றும் தெரிவித்தான். பாண்டிய குலத்தின் மணிமகுடமும் இந்திரன் தந்த ரத்தின ஆரமும் இலங்கையிலேதான் இருக்கின்றன; இருக்குமிடமும் தனக்குத் தெரியும்; அங்கேயே மகிந்தன் மதுராந்தகனுக்குப் பட்டாபிஷேகம் செய்து வைத்து விடுவான்! அதற்குள் சோழ நாட்டுச் சிற்றரசர்களுக்குள் போர் மூண்டு சோழ சாம்ராஜ்யம் சின்னாபின்னம் அடைந்து விடப் போகிறது. ஆதித்த கரிகாலனைக் கொன்று விட்டதாகப் பழுவேட்டரையர் — சம்புவரையர் கட்சியின் மீது மற்றவர்கள் குற்றம் சாட்டுவார்கள். மதுராந்தகன் இப்போது தன்னுடன் வந்துவிட்டபடியால், அவனைக் கொன்று விட்டதாக வேளார் கட்சியின் மீது பழுவேட்டரையர்கள் குற்றம் சுமத்துவார்கள். இந்தப் படுகொலைகளுக்கு அருள்மொழிவர்மனும் உடந்தையாக இருந்ததாக மக்களிடையே வதந்தி பரவப் போகிறது. ஆகையால் அவனையும் மக்கள் வெறுக்கத் தொடங்குவார்கள். இப்படியெல்லாம் சோழ ராஜ்யம் குழப்பத்தில் ஆழ்ந்திருக்கும் போது இலங்கை மன்னன் ஒரு பெரிய சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு பாண்டிய நாட்டின் மீது படையெடுத்து வருவான். மதுரையைக் கைப்பற்றுவான். மதுராந்தகனுக்கு உலகம் அறிய இரண்டாந் தடவையாக முடிசூட்டு விழா நடத்தி வைப்பான். 'மதுராந்தகன்' என்ற பெயரையும் மாற்றிச் 'சோழ குலாந்தகப் பெருவழுதி' என்ற அபிஷேகப் பெயரையும் சூட்டுவான்!.....



வ்வாறெல்லாம் கருத்திருமன் சொல்லி வந்த போது மதுராந்தகனுடைய உள்ளம் விம்மியது. அவனுடைய வாழ்க்கையில் அதுவரை கண்டிராத உற்சாகத்தை அவன் அடைந்தான். போர்க்களங்களில் கேட்கும் வெற்றி முரசுகள் அவன் காதில் ஒலித்தன. பட்டாபிஷேக வைபவங்களுக்குரிய பலவகை இன்னிசைக் கருவிகள் மற்றொருபால் முழங்கின. ஆயிரமாயிரம் மக்களின் குரல்கள் "பாண்டிய சக்கரவர்த்தி வாழ்க!" "சோழ குலாந்தகப் பெருவழுதி வாழ்க!" என்று கோஷமிட்டன.

இப்படி இன்பமயமான கற்பனை உலகத்தில் மதுராந்தகன் சஞ்சரித்துக் கொண்டிருந்த போது, அந்தக் கற்பனைக் கனவைக் கலைத்துக் கொண்டு குதிரைகளின் காலடிச்

சப்தம் கேட்டது. சற்றுத் தூரத்தில் தீவர்த்திகளின் வெளிச்சமும் தெரிந்தது.

கருத்திருமன் அவ்வளவு விரைவாக ஆட்கள் தங்களைத் தொடர்ந்து வரக்கூடும் என்று எதிர்பார்க்கவில்லை. ஆகையால் மிக்க பரபரப்புடன் குதித்தெழுந்து, "இளவரசே! எழுந்திருங்கள், குதிரை மேல் ஏறுங்கள்! அவர்கள் வருவதற்கு முன் நதியைக் கடந்து விட வேண்டும்!" என்றான்.

ஒரு கணத்தில் அவன் குதிரை மேல் பாய்ந்து ஏறிக் கொண்டான். மதுராந்தகன் குதிரை மேல் ஏறுவதற்கு கஷ்டப்படுவதைப் பார்த்து விட்டு, "ஐயா! ஒன்று செய்யுங்கள். தாங்கள் பாலத்தின் மேல் நடந்து அக்கரை போய் விடுங்கள். நான் தங்கள் குதிரையையும் அக்கரைக்குக் கொண்டு வந்து சேர்த்து விடுகிறேன்!" என்றான்.

"அழகாயிருக்கிறது! என்னைப் பயங்காளி என்று நினைத்தாயா? குதிரை மேலேறி இந்த ஆற்றைக் கடக்க என்னால் முடியாவிட்டால், அப்புறம் கடல் கடந்து இலங்கை போவது எப்படி? பாண்டிய ராஜ்யத்தைப் பிடித்துச் சிங்காதனம் ஏறுவது எப்படி?" என்று வீரியம் பேசியபடியே மெதுவாகக் குதிரை மேலே ஏறினான்.

இரண்டு குதிரைகளும் நதியில் இறங்கின. மதுராந்தகனுடைய குதிரை தண்ணீர்க் கரையண்டை திடீரென்று முன்னங்கால் மடிந்து படுத்தது. "ஐயோ!" என்று அலறினான் கருத்திருமன். நல்லவேளையாகக் குதிரை சமாளித்து எழுந்து தண்ணீரில் இறங்கியது.

மதுராந்தகனுடைய மனத்திற்குள் திகில் தான். ஆனால் வெளியில் காட்டிக் கொள்ளாமல் "இது என்ன பிரமாதம்? இப்படிப் பயந்து விட்டாயே?" என்றான்.

மதுராந்தகனுடைய குதிரையின் காலில் ஏதாவது காயம்பட்டிருந்ததோ என்னமோ, அது வெள்ளத்தில் மற்ற குதிரையைப் போல் விரைந்து செல்லவில்லை. அடிக்கடி அது வெள்ளத்தோடு வெள்ளமாகப் போகப் பார்த்தது. அதைத் திருப்பி எதிர்க் கரையை நோக்கிச் செலுத்துவதற்கு மதுராந்தகன் மிக்க சிரமப்பட்டான்.

கரையோடு வந்த குதிரைகளின் காலடிச் சப்தமோ நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருந்தது.

பாதி ஆறு வரையில் கருத்திருமன் இளவரசனுக்காக நின்று நின்று போய்க் கொண்டிருந்தான். பிறகு ஒரு யோசனை அவன் மனத்தில் உதித்தது. மதுராந்தகனுக்குத் தைரியம் சொல்லி விட்டு அக்கரையை நோக்கி விரைந்து சென்றான். கரையில் ஏறிக் குதிரையை ஒரு மரத்தினடியில் நிறுத்தினான். குதிரை மேலிருந்து பாய்ந்து இறங்கி மூங்கில் பாலத்தின் வழியாகத் திரும்பவும் வடகரைக்கு வந்தான். மதுராந்தகனிடமிருந்த சிறிய கத்தியை அவன் ஏற்கெனவே வாங்கி வைத்துக் கொண்டிருந்தான். அதைக் கொண்டு அவசர அவசரமாகப் பாலத்திலிருந்து தொங்கிக் கொண்டிருந்த கயிறுகளை அறுத்து முடிபோட்டான். அது போதிய நீளமானதாகத் தெரிந்ததும், ஒரு முனையைப் பாலத்தில் சேர்த்துக் கட்டி விட்டு மற்றொரு முனையைச் சாலையின் மறுபுறத்திலிருந்த மரத்தின் அடியில் சேர்த்துக் கட்டினான்.

மர நிழலினால் அதிகமாயிருந்த இருட்டில் அவ்விதம் சாலை நடுவில் குறுக்கே ஒரு கயிறு கட்டியிருந்ததை யாரும் பார்க்க முடியாது அல்லவா? அதிலும் குதிரை மேல் வேகமாக வருகிறவர்கள் நிச்சயம் பார்க்க முடியாது.

ந்தக் காரியத்தை அவன் செய்து முடித்ததும் பாலத்தின் வழியாகத் திரும்பி ஓடி விடலாமா என்று யோசித்தான். அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டு அங்கேயிருந்த மரம் ஒன்றின் பேரில் சரசரவென்று ஏறிக் கிளைகளின் மறைவில் உட்கார்ந்து கொண்டான்.

மதுராந்தகனுடைய குதிரை கிட்டத்தட்ட நதியைக் கடந்து அக்கரையை நெருங்கியிருந்தது.

இன்னும் சில நிமிஷ அவகாசம் கிடைத்தால், கரைமேல் ஏறி மதுராந்தகன் குதிரை அப்பால் சென்று விடும்.

இந்த எண்ணம் அவன் மனத்தில் தோன்றி மறைவதற்குள் சாலையோடு வந்த குதிரைகள் அந்த மரத்தடியை நெருங்கி விட்டன. ஐந்தாறு குதிரைகள் இருக்கும். அவற்றில் இரண்டு குதிரைகள் முன்னணியில் வந்தன. அவை இரண்டும் ஒரு கணம் முன் பின்னாகக் கருத்திருமன் கட்டியிருந்த குறுக்குக் கயிற்றினால் தடுக்கப்பட்டுத் தலைகுப்புற உருண்டு விழுந்தன.

கருத்திருமன் மரத்தின் மேலிருந்தபடி தன்னையறியாமல் 'ஹா ஹா ஹா' என்று பலமாகச் சிரித்தான்.

குதிரைகள் மேலிருந்து விழுந்தவர்களில் ஒருவன் "ஐயோ! பிசாசு!" என்று பயங்கரமாக அலறினான்.

குரலிலிருந்து அவன் வைத்தியர் மகன் பினாகபாணி என்பதைக் கருத்திருமன் தெரிந்து கொண்டான். விழுந்தவன் கழுத்து நெறிந்து இறந்திருக்கக் கூடாதா, இன்னமும் உயிரோடிருக்கிறானே என்றும் எண்ணிக் கொண்டான்.

இன்னொரு குதிரை மேலிருந்து விழுந்தவன் சிறிதும் அதிர்ச்சியடையாமல் தரையிலிருந்து எழுந்தான். அவன் நமது பழைய நண்பன் கந்தமாறன்தான்!

(தொடரும்)



## விற்கப்படும் பெர்லின் சுவர்!

மக்களால் உடைத்தெறியப்பட்ட பெர்லின் சுவரின் கான்கிரீட் துண்டுகளை விற்கும் உரிமையைக் கிழக்கு ஜெர்மனியில் உள்ள ''லைமெக்ஸ்'' என்ற நிறுவனம் பெற்றுள்ளது. இதிலிருந்து கிடைக்கும் தொகை, கிழக்கு ஜெர்மனியில் உள்ள அநாதைக் குழந்தைகளின் நலனுக்குச் செலவிடப்படுகிறது. அதிகபட்சமாக இருபத்தைந்து டன் எடையுள்ள சுவர் துண்டை சிகாகோ நகரில் உள்ள வர்த்தகர் ஒருவர் வாங்கியுள்ளார்.

நன்றி: பி. பி. சி.

— வி. கே. எம்.

உலகெங்கிலும் முக்கிய நகரங்களில் நிலத்தின் மதிப்பு மிக அதிகமாகிக் கொண்டுவருகிறது. ஆனால் டோக்கியோவுக்கு ஈடாக எதையும் கூற முடியாது. உதாரணமாக, அங்கு கின்சா தெருவில் ஒரு போஸ்ட் கார்டின் பரப்பளவே உள்ள நிலத்தின் விலை: ஐம்பத்திரண்டாயிரம் ரூபாய்!

ஆதாரம்: 'சண்டே அப்சர்வர்.'

தகவல்: வி. ந. ஸ்ரீகாந்.

# சிப்ஸ்.



மேற்கு ஜெர்மனியில், ''ஒன்றும் செய்யாதோர் சங்கம்'' என்று இருக்கிறது. பெயரைப் பார்த்தால் சோம்பேறிகள் போலத் தோன்றினாலும் சங்கத்தின் குறிக்கோள் அதுவல்ல. உறுப்பினர்கள் — வருடத்தில் மூன்று வாரங்கள் கண்டிப்பாகச் சங்கத்துக்கு வந்து ஓய்வெடுக்க வேண்டும். ஒரு வேலையும் செய்யக் கூடாது. மீறுகிறவர் சங்கத்திலிருந்து நீக்கப்படுவார். இச்சங்கத்தில் ஜெர்மனி நாட்டு மந்திரிகள் கூட அங்கத்தினர்களாக உள்ளனர்.

— சத்தி ஏ. ஜே. ஜப்பார்.




எண்பத்தைந்து வயது கோடீஸ்வரர் இருபது வயது இளம் பெண்ணைத் திருமணம் செய்து கொண்டார்.

அவருக்கு உடல் நலமின்றி நிலைமை மிக மோசமாயிற்று. படுக்கையில் இருந்தவர் தம் மனைவியிடம் சொன்னார்:

''டார்லிங்! நான் உயில் எழுதி விட்டேன். எனக்குச் சொந்தமான ஆறு பங்களாக்கள், இரண்டு எஸ்டேட்டுகள், பாங்கில் இருக்கும் முப்பது இலட்ச ரூபாய் எல்லாவற்றையும் உன் பெயருக்கே எழுதி விட்டேன்!''

''என் மீது இத்தனை அன்புடனிருக்கும் உங்களுக்கு என்ன கைம்மாறு செய்வதென்றே தெரியவில்லை'' என்றாள் அவள்.

''ஆக்ஸிஜன் சிலிண்டரின் வாயை மூடி விட்டாயே, அதைத் திறந்து விடு. போதும்'' என்றார் கோடீஸ்வரர்!

— சி. பன்னீர்செல்வன்.



ஜானஸ் என்ற கடவுளை ரோமர்கள் வணங்கி வந்தார்கள். இந்த தெய்வத்திற்கு இரண்டு முகங்கள். ஒன்று முன்னால் பார்ப்பதற்கும் மற்றொன்று பின்னால் பார்ப்பதற்கும். இந்த இரு முகக் கடவுளின் பெயரே ஜனவரி மாதத்திற்கு வைக்கப்பட்டது.

'சென்ற ஆண்டிலே நாம் என்ன செய்தோம்? இந்த ஆண்டிலே என்ன செய்ய வேண்டும்?' என்று புத்தாண்டு பிறக்கும் போது ஒவ்வொருவரும் சிந்திக்க வேண்டும். இதற்காகவே இந்தக் கடவுளின் பெயர் ஜனவரிக்கு வைக்கப்பட்டு இருக்கிறது.

— 'அறிவு வளர்ச்சிக்கு 300 குறிப்புகள்' எனும் நூலிலிருந்து.

— ஆ. புகாரி





# மறந்துவிடு

**வா**ன்புகழ் வள்ளுவரின் வாழ்க்கை நூலான திருக்குறளில் 'இன்னா செய்யாமை' அதிகாரத்தில் ஒரு குறள்:

**"இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர் நாண**
**நன்னயஞ் செய்து விடல்".**

அதாவது, 'துன்பம் செய்தவரைத் தண்டிக்க வேண்டுமாயின் அவர் வெட்கப்படும்படியான நன்மையைச் செய்து விட வேண்டும்.'

துன்பம் செய்தவனுக்கு நன்மை செய்தால் மட்டும் போதாது. கூடவே, அதை மறந்து விட வேண்டுமாம்! 'விடல்' என்ற சொல்லின் பொருள், விட்டு விட வேண்டும் அல்லது மறந்து விட வேண்டும்.

ஏன் மறந்து விட வேண்டும்?

"பார்த்தீர்களா...! அவன் எனக்குத் துன்பம் செய்தான். நான் அதற்குப் பதிலாகப் பெருந்துன்பம் விளைவிக்காமல் நன்மையே செய்தேன்" என்று நாம் பல பேரிடம் சொல்லிக் கொள்வோம். செயற்கரிய காரியம் செய்து விட்டதாக நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு திரிவோம்.

இதனால் பயன் விளையாது. தீமையே ஏற்படும். முதல் தீமை நமக்கு ஏற்படும் கர்வம். மற்றொன்று நாம் யாருக்கு நன்மை செய்தோமோ அவருக்கு ஏற்படும் துயரம்.

நாம் நான்கு பேரிடம் சொல்லிக் கொண்டு திரிவது, நன்மை பெற்றவனின் காதிற்கு எட்டுகிறது என்று வைத்துக் கொள்வோம். நன்மை பெற்றவன் என்ன நினைப்பான்? 'இவன் என்ன பெரிய நன்மை நமக்குச் செய்து விட்டான்? இதைப் போய் எல்லாரிடமும் சொல்லிக் கொண்டு திரிகிறானே நமக்குத் தலைகுனிவை ஏற்படுத்துகிறானே என்று அங்கலாய்த்துக் கொள்வானே தவிர, அவன் திருந்துவதற்கு வாய்ப்பில்லை.

நாம் செய்த நன்மையை நான்கு பேரிடம் சொல்லாமல், மறந்து விட்டால், நன்மை செய்ததையே நினைக்காமல் இருந்து விட்டால், நன்மை பெற்றவன் திருந்துவதற்கு நல்ல வாய்ப்பு ஏற்படுகிறது.

'ஆகா. அவனுக்கு நாம் ஏற்கெனவே கெடுதல் செய்திருந்த போதிலும் நமக்கு ஒரு நெருக்கடி ஏற்பட்ட தருணத்தில் எவ்வளவு பெரிய உதவி செய்தான்? அவனிடம் பகையுணர்ச்சி கொண்டோமே! இப்பொழுதே சென்று அவனிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்' என்று எண்ணி மனந்திருந்துவான்.

இவ்வளவு அரிய கருத்தினை ஒரே ஒரு சொல்லிலே பதிய வைத்திருக்கிறார் வள்ளுவர்!

'விடல்' என்ற அந்தச் சொல்லை நாம் விட்டு விடாமல் மனத்தில் இருத்திக் கொள்வோம்! குறளின் முழுப் பொருளையும் உணர்ந்து செயல்படுவோம்.

**— இரா. பொன்னுசாமி,**
**பி. அக்ரஹாரம், தருமபுரி (மாவ)**

# மிஸ்டர் கார்த்திக்



உயிருக்குப் போராடும் ஜமீன்தார் தம் பிள்ளையிடமும் பேத்தியிடமும், 'நம்ம பரம்பரை வைரத்தை அடையப் பங்காளி எதிரிங்க போராடிட்டிருக்காங்க. அவங்களண்டையிலிருந்து அதைக் காப்பாத்திக் கொண்டு வந்துருங்க. நேபாளத்திலே இருக்கிற பிரும்மானந்த சாமியாருக்கு அது இருக்கிற இடம் தெரியும்,' என்று அதை அடையற விதத்தையும் ரகசியமா (நமக்குத் தெரியாம) சொல்லிவிட்டு மண்டையைப் போட்டாலும் போட்டார். அப்புறம் 'அட்வெஞ்சர்'தான். எதிரிகள் ஜமீன்தார் மகனையும் சுட்டு வீழ்த்த, மகளாகப் பட்டவள் நாணயமான பேட்டை ரௌடி மிஸ்டர் கார்த்திக்கின் உதவியுடன் எதிரிகளைச் சமாளித்து எப்படி அந்த 75 கோடி பெறுமான பரம்பரை வைரத்தை அடைகிறார் என்பதுதான் கதை.

'பாட்டி கதைக்குப் பாண்ட் ஷர்ட் போட்டிருக்கிறார்கள்' என்று சொன்னால், 'Raiders of the Lost Ark பார்த்தீங்களே, அப்போ இப்படிச் சொன்னீங்களா?' என்று சண்டைக்கு வருவார்கள். விடுங்கள்.

கும்பல் கும்பலாய் வரும் எதிரிகளை யெல்லாம் துவம்சம் பண்ணும் கார்த்திக், சவக்குழி தோண்டி மேப்பைக் கைப்பற்றி, எதிரிகளிடமிருந்து காப்பாற்ற அதை ஓர் ஓட்டைக் காரில் போட்டு வைக்க, அந்தக் கார் காணாமல் போக, ராஜஸ்ரீ, 'நீ அந்த வைரத்தை அபகரிக்கணும்னே ஆரம்பத்திலேர்ந்தே திட்டம் போட்டு ஏமாத்திட்டே. நீ நாசமாய்ப் போவே,' என்று அபாண்டமாய்ப் பழி சுமத்தியதும் அதிர்ந்து தடுமாறுவதும் உண்மையை நிரூபிக்க இயலாமல் தத்தளிப்பதும் பிழிசல். மற்றபடி வெறும் வீரதீரப் பராக்கிரமம்தானா மிஸ்டர் கார்த்திக்? அதற்கெல்லாம் அப்பாற்பட்ட கார்த்திக்கைச் சரியான விதத்தில் பயன்படுத்துங்கள் ப்ளீஸ்.

கொஞ்சம் வடநாட்டு வாசனையோடு கவர்ச்சி பிராண்ட் குத்திக் கொண்டு வரும் புதுமுகத்திடம் பதுமைத்தனம் தூக்கல். சரியானபடி பாவம் பிடிக்கத் தெரியவில்லை. பாவம்! தண்ணீருக்குத் தவித்து இந்தப் பக்கம் கார்த்திக்கை நீர் கொண்டு வர ஏவி விட்டு, அந்தப் பக்கம் யாரோ நேபாளம் கிழடுகளிடம் போய் அவர்கள் கொடுத்த சோமபானத்தை அருந்தி, களியாட்டம் புரிவது ஆபாச ரகம்.

எதிரி வில்லன் விஜயகுமாரின் ஸ்கீமிங் நடவடிக்கையில் கொஞ்சம் சாமர்த்தியம் எட்டிப் பார்க்கிறது.

கொழு கொழு விஜி நீண்ட இடைவெளிக்குப் பிறகு தலைகாட்டியிருக்கிறார். நேபாளத்தில் தனக்குத் தோழி என்று ராஜஸ்ரீ அவரை அறிமுகப்படுத்தும்போதே பிசிறு தட்டுகிறது. இருந்தாலும் கார்த்திக்கையும் ராஜஸ்ரீயையும் கட்டிப் போட்டு விட்டு, எதிரி விஜயகுமார், 'ஆதாயமில்லாம உங்களுக்கு ஒத்தாசை பண்றதுக்கு நான் என்ன முட்டாளா? அந்த மேப் எங்கே?' என்று எகத்தாளம் கொட்ட, விஜியும் கூடச் சேர்ந்து கொண்டு, 'நானும் இவர் ஆள்தான்,' என்று சொல்லும் போது ஒரு லேசான அதிர்வு தருகிறார்.

காமிக் துறைக்குக் காவல் துறைதான் வாகு என்று இப்படியா அநியாயம் பண்ணுவது? சரியான காமா சோமா காமிக். ஆமாம் சார், காமாவாக எஸ். எஸ். சந்திரனும் சோமாவாகச் செந்திலும் வந்து கன்னாபின்னாவென்று மடமாரி பொழிந்திருக்கிறார்கள். எரிச்சல் சிரிப்பு.

அவுட்டோர் யூனிட் நேபாளத்தில் பாடியிறங்கி, 'பார் பார் நேபாள் பார்,' என்று அங்கு சுற்றுலா போய் வந்த ஒரு கனவு மயக்கம் தந்திருக்கிறார்கள். போனால் போகிறது என்று ஏற்றுக் கொள்ள வைக்கும் ஒரு ப்ளஸ் பாயிண்ட்.

அலிபாபா குகை மர்மத்துக்கும் மேலான அந்தக் குகை வேலைப்பாடும் குபீர் குபீர் அதிர்வுகளும் விட்டலாச்சார்யாவின் மாய மந்திரக் கதை சமாசாரங்களாய்த் தெரிகின்றன. என்னதான் மர்மம் இருந்தாலும் ஒரளவு அறிவுபூர்வமாய் இருக்கலாமே!

அகலத் திரையில் ஏதோ அபத்த ஆங்கிலப் படம் பார்த்த மாதிரி இருக்கிறது.

— பி. எஸ். எஸ்.

மகாதேவனின் பார்வை திருக்குளத்து மீன்களின் துள்ளலை வேடிக்கை பார்ப்பதிலிருந்து மீண்டு, ஆலயத்தின் கம்பீரத்தை வெளிப்படுத்தும் ராஜ கோபுரத்தின் மீது சென்று நிலைத்தது.

கம்பீரத்தை வெளிப்படுத்தும் ராஜ கோபுரமா?

பொதுவாக அப்படித்தான். ஆனால் இது மட்டும் விதி விலக்கு. ஒருகாலத்தில் இருந்திருக்கும். இப்போது இல்லை. இப்போது கம்பீரத்தைச் சிதைக்கும் கோபுரமாய் நிற்கிறது. சிதிலப்பட்டு நிற்கிறது!

ஐந்து நிலைக் கோபுரம் தான். அதிலும் இரண்டினை முற்றிலுமாய்க் காணவில்லை. எஞ்சி நிற்பவைகளும் சிதிலமாய் நினைவுச் சின்னம் மாதிரி நிற்கின்றன.

மகாதேவனின் கண்கள் இலேசாய்ப் பனித்தன.

இந்த ஊரில் இவரைப் போல மனநிலை கொண்டவர்கள் எவராவது இருக்கிறார்களா? தேட வேண்டும். தேடினால் ஓரிருவர் அகப்படாது போக மாட்டார்கள். ஆனால் இவர்கள் கூடி என்ன செய்து விட முடியும்? எல்லோரும் கூடினால் தேர் நகரலாம். கூட வேண்டுமே!

இங்கு அவரவர் பாடே பெரும்பாடு என்று சொல்லிக்கொள்கிறார்கள். ஒதுங்கிக் கொள்கிறார்கள். ஆலயதரிசனம் பண்ண வருகிறவர்களே அபூர்வம்! அபூர்வமாய் வருகிறவர்களும் தங்கள் பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு வருகின்றவர்கள் போல அல்லவா பேசிக் கொண்டு போகிறார்கள்.

கடவுளைப் பற்றியும், சத் விஷயங்கள் குறித்தும், சங்கீதம் குறித்தும், பேசுகிற மகாதேவனோடு பேச அங்கு எவரும் தயாரில்லை. ஆலயத் திருப்பணி, கோவில் கும்பாபிசேகம் என்று பேசியே ஆளைக் கொன்று விடுவார் என்று விலகிப் போய் விடுவார்கள்.

எனவே, தரிசனம் பண்ணியபின் தனித்து விடப் பட்டவராக திருக்குளக் கரையில் வந்து அமர்வார். தரிசனம் தந்த அம்பிகையோ, சிதிலப்பட்டுக் கிடக்கும் ஆலய கோபுரமே மனத்தை வந்து நிரடும்.

புனருத்தாரணம் ஆகிப் புனித முழுக்கு நடைபெறும் நாள் எந்நாளோ என்று தவிப்பார்.

கற்பனையில் கலசங்கள் மினு மினுக்க ராஜகோபுரம் எழுந்து நிற்கும். பாலும் தேனும் பனி மலை நீரும் கோபுர வழி ஒழுகும். வேத விற்பன்னர்களின் கூட்டு



முழக்கம் விண்ணை முட்டும். கும்பாபி ஷேகக் காட்சியில் திளைக்கும் மக்கள் 'ஹர ஹர சங்கர, ஜெய ஜெய சங்கர' என முழக்கு வார்கள்.

இவை எல்லாம் ஒரு நிமிடக் கனவுதான்.

மறுநிமிடம் கற்பனை சிதறும்.

சிதிலப்பட்ட கோபுரம் நிதர்சனப்பட்டுக் கண்களை உறுத்தும்.

நெஞ்சில் ஆற்றாமைப் புயல் எழும்.

**"அ**ப்பா என்ன சொல்வரோ தெரியலே. லேசிலே ஒப்புக் கொண்டுவிட மாட்டார்" என்று கூறிக் கொண்டே மகனுக்கு டிபன் பரிமாறலானாள் சாவித்ரி.

"பாரும்மா, நம்ம தெருவே மாறிடுச்சு. ஒண்ணு ரெண்டு வீடுங்கதான் நம்ம வீட்டைப் போல பழைய பாணி வீடுகளாவே இருக்கு. எல்லாரும் இடிச்சுப் புதுசாக் கட்டிட்டாங்க. ரீமேக் பண்ணி பிரமாதப் படுத்திட்டாங்க.நேற்றுஎன்னோடஃப்ரெண்ட் ஸுங்க அத்தனை பேரும் ஒட்டு மொத்த மாய் என்னைக் கேட்ட கேள்வி இது தாம்மா.... 'இன்னமும் ஏண்டா வீட்டை ரீமேக் பண்ணலே? முப்பாட்டன் காலத்து நாட்டு ஓடும். அதுவுமா... ஒல்டாத் தெரியுதே. மாத்துடா சீக்கிரமே'ன்னாங்க" என்றான் ஸ்ரீகாந்த்.

"எனக்கும் அதாம்பா ஆசை! வீட்டைக் கொஞ்சம் மாற்றிக் கட்டி, வண்ணம் பூசி, வசதிகளெல்லாம் செஞ்சுக்கணும்னு எண் ணம்தான். ஆனா... உங்கப்பா இதைச் சுலப மாய் ஒத்துக்குவார்னு தோணலே" என் றாள் சாவித்ரி.

"எப்படிம்மா சொல்றே?"

"கொல்லைப்புறத்திலே பெரிசாய் அடை சலாய் நிற்கிற வேப்பமரத்தை வெட்டிட்டு, ரெண்டு தென்னையோ, பலாவோ வைக்க லாம்னு நான் அபிப்பிராயம் சொன்னப்ப, அது அவரோட பாட்டி நட்ட மரம்னு சொல்லி வெட்டக் கூடாதுன்னுட்டார். ஹாலிலே தொங்குகிற பழங்கால லஸ்தர் விளக்கை மாத்திட்டு, நாகரிகமாய் டூம் போட்டு வைக்கலாம்னு சொன்னேன். மாட் டேன்னுட்டார். அது அவரோட தாத்தா ஆசையாய் வாங்கிப் போட்ட விளக்குன்னு சொல்லி, தாத்தா நினைவாய் அங்கேயே கிடக்கட்டும்னுட்டார். இப்படிச் சின்னச் சின்னக் காரியங்களுக்கே பழைமை பேசி மறுப்புச் சொல்கிறவர், இந்த ஊரிலேயே பழங்காலத்திய மாடல்லே இருக்கிற வீடு இதுதான்னு மார் தட்டிக்கிறவர், இதை ரீமேக் பண்ண ஒத்துக்குவார்னு எனக்குத் தோணலே ஸ்ரீகாந்த்."

"ஒப்புக் கொள்ள வைக்கணும்மா. இந்தத் தெருவே மாடர்னாய் மாறியாச்சு. நம்ம வீடு ஏன் திருஷ்டிபோல் பழைமை பேசி நிற்கணும்? லண்டன்லே டாக்டர் நான். இங்கே என்னோட வீட்டைப் பார்...!"

சலிப்புடன் கூறினான் ஸ்ரீகாந்த்.

மேலும் கொஞ்சம் 'காரச் சட்னி வைத்து நெய்யை ஊற்றிய சாவித்ரி, "சொன்னால் கேட்கிற ஜாதி இல்லையே அவர்! பிடிவாத மும் சேர்ந்தே பிறந்திருக்கும் போலிருக்கு. இந்த நாட்டின் பழைமையான பிரதிநிதி தான் மட்டும்தான் என்கிற எண்ணம் அவருக்கு. இப்ப நீயோ மூணு மாச லீவிலே வந்திருக்கே! வீட்டை உன் இஷ்டம் போல ரீமாடல் பண்ணிக் கட்டிக் கொள்ள நல்ல அவகாசம் இருக்கு. அந்த வேலை முடிஞ்சு டுத்துன்னா, அப்புறம் உன்னோட கல் யாணக் காரியம் இருக்கு. ஒரு நல்ல பெண் ணாய்ப் பார்த்துக் கல்யாணத்தையும் பண்ணி, கையோட அழைச்சுக்கிட்டே போயிடலாம். உனக்கும் சந்தோஷம். எங்க ளுக்கும் திருப்தி."

"கல்யாணத்தைப் பற்றி இப்ப என் னம்மா! முதல்லே வீட்டைத்தான் ரீமாடல் பண்ணிக் கட்டியாகணும். எப்படியாவது அப்பாவோட ஒப்புதலை வாங்கியாகணும். நீ கேட்கிறியா, இல்லை நானே அப்பா கிட்டே நேர்லே கேட்கவா?"

ஸ்ரீகாந்த் இப்படிக் கேட்டதும், சாவித்ரி



ஒரு நிமிடம் மௌனப்பட்டாள்.

''சரி, எதுக்கும் நானே அவர்கிட்டே முதல்லே இதைச் சொல்லிப் பார்க்கிறேன். அதுக்கு அவர் தர்ற பதிலை வச்சு, மேலே பண்றதை யோசிக்கலாம்,'' என்றாள்.

''சரிம்மா, நீயே கேட்டுப் பார். ஆனால் முடிவிலே அவரோட சம்மதத்தை மட்டும் எப்படியாச்சும் வாங்கிடணும். ஆமாம்...'' என்றான் உறுதிக் குரலில்.

''பின்னே, விட்டுடவா போறோம்?''

''இப்ப நான் காரவிளை வரை போய்ட்டு வரணும். ராஜு எதிர்பார்த்துக்கிட்டிருப் பான். போய்த் திரும்பும் முன்னாடி அப்பா கிட்டே கேட்டுடு'' என்றான் ஸ்ரீகாந்த்.

''சரிடா ஸ்ரீகாந்த்.''

அவன் கை அலம்பலானான். சாவித்ரி சூடான காப்பியை எடுத்துக் கொடுத்தாள்.

நிதானமாய் ருசித்துப் பருகினான். குவளையைத் திருப்பித் தரும்போதும் அப்பா விடம் கேட்க வேண்டும் என்பதை நினைவு படுத்தினான்.

''நீ ஒருத்தன்டா! எனக்கே ரொம்ப நாள் ஆசை இது! உலகமே மாறியாச்சு. நம்ம வீடு மட்டும் மாறலியேன்னு ஆதங்கம். மறப் பேனாடா, நான்? வெளியே போயிருக்கிற அவர் வந்துடட்டும், முதல்லே இதை என்ன ஏதுன்னு கேட்டுட்டுத்தான் அப்பாவுக்கு டிபனே வைப்பேன், போறுமாடா, ஸ்ரீகாந்த்?'' என்று சாவித்ரி சிரிக்க, ''போறும்மா... போறும்... போறும்...'' என்று அவனும் சிரித்தான். பிறகு படி இறங் கினான்.

திருநீறு துலங்கும் நெற்றியும் வெற்றிலையால் பவளம்போல் மின்னும் இதழ்களுமாய், ஈஸிசேரில் அமர்ந்தபடி அபிராமி அந்தாதியில் மனத்தைச் செலுத்திக் கொண் டிருந்தார் மகாதேவன்.

பிரச்னையை அணுகும் எண்ணத்துடன் அவர் முன்பு போய் நின்றான் ஸ்ரீகாந்த்.

அவர் அரவம் கேட்டுநிமிர்ந்தார்.

''ஏண்டா நிற்கிறே? உட்கார்டா'' என்றார் அன்பு நிறைந்த பார்வையோடு.

பணிவு தெரிய அமர்ந்து கொண்டான்.

'இப்ப நீ வந்திருக்கிறது அம்மா சொன்ன விஷயம் குறிச்சுத்தானே!' என்பது போல் பார்த்தார்.

பின்னாடியே சாவித்ரியும் வந்து நின்று கொண்டாள்.

''சொல்லேண்டா'' என்றாள் சாவித்ரி.

''பாருங்கப்பா. நம்ப தெருவே முழுசா மாறிடுச்சு. ஆனால் நம்ம வீடு மட்டும்தான் இன்னமும் நாட்டு ஓடு போர்த்திக்கிட்டு நிற்குது...'' என்று கூறிவிட்டு அவரை ஆழப் பார்வை பார்த்தான்.

''ம்... ம்...'' என்றார் மகாதேவன்.

''அதனாலே ரீமேக் பண்ணி... மாடலாய்க் கட்டிடலாம்னு நினைக்கிறேன்.''

''ம்... ம்... பண்ணேன்...'' என்றார்.

இந்தப் பதில் அவர்களிடம் எதிர் பாராத மகிழ்வை உற்பத்தி பண்ணிற்று. இத்தனை சுலபமாய் இதனை அவர் ஏற்பார் என்று எதிர்பார்த்திருக்கவில்லையே!

''ரொம்பவும் சந்தோஷம் அப்பா. நான் ஏற்கெனவே ப்ளான் போட்டு வச்சிட்டேன். இந்தத் தெருவிலேயே உயரமான வீடு நம்மோட வீடாத்தான் இருக்கணும். அத

---

## உதயத்தின் அறிகுறி!

●● ஏ... இளைஞனே — உன்
காதல் கனவுகள்
சிலுவையில் ஏற்றப்பட்டதற்காக
உன் சுகங்களைச்
சாகடித்துக் கொள்கிறாயே
இது நீதமா?



●● ஆன்மாவின் தேடல்
காதல் மட்டும்தானா?
இமைகளைப்
பகைத்துக் கொண்டு
விழிகள் துயில நினைத்தால்
விகார மாயிருக்காதா?

●● காதல் கசப்புகளில்
வாழ்வின் குறிக்கோள்கள்
சுருங்கிப் போய் விட்டால்
சமுதாயம் அதைச்
சகித்துக் கொள்ளுமா?

●● உயிர் சுகமான தென்று
செத்துப் போன பிறகு
சிந்தித்துப் பார்க்க முடியுமா என்ன?

●● கனவைக் கட்டிப் போட்டு விட்டு
நினைவை நேசிக்கக் கற்றுக் கொள்
அப்போது —
உதயத்தின் அறிகுறிகள்
உன் உள்ளத்தை அலங்கரிக்கும்

— த. கார்த்திகேயன்.

னாலே மூனு மாடி வச்சுக் கட்டிடலாம்னு இருக்கேன்.''

''தாராளமாய் அப்படியே வச்சுக் கட்டு'' என்றார் வெகு நிதானமாய்.

நம்பவே திணறினார்கள் சாவித்ரியும் ஸ்ரீகாந்தும்.

''அப்படின்னா, நாளைக்கே வேலையை ஆரம்பிச்சுடலாமாப்பா?'' என்று பரபரப்புடன் கேட்டான் ஸ்ரீகாந்த்.

''ஓ...! தாராளமாய் ஆரம்பியேன்! நிச்சயமாய் மூனு மாடி வச்சே கட்டப் போறியாடா?''

''ஆமாம்ப்பா! அப்பத்தான் இந்தத் தெருவிலேயே உயர்ந்த வீடு நம்முடையதாக இருக்கும்.''

''ஆனால்... வந்து... ஸ்ரீகாந்த்... ஒரு பிரச்னை இருக்குடா...''

இதென்ன திடீரென்று!

''என்னப்பா சொல்றீங்க! இதுல என்ன பிரச்னை இருக்க முடியும்? நம் வீட்டை நம் இஷ்டம் போல் உயரமாய்க் கட்டப் போகிறோம். அதனாலே என்ன பிரச்னை வரும்?''

''சரிடா! ஆனால் நாம் இருக்கிறது சந்நிதித் தெருவாச்சே! நம் வீட்டு உயரம் கூடிப் போனால் சுவாமி கோபுர உயரம் குறைஞ்சு போயிடுமே. சாஸ்திரப்படி அப்படிக் கூடாதுடா. சுவாமியோட ராஜ கோபுரத்திலே இப்ப மூனு நிலைகள்தான்... அதுவும் பழுதுபட்டு இருக்கு. இப்ப, இந்த பொசிஷன்லே நீ மூனு மாடி வச்சுக் கட்டினேன்னா, நிச்சயமாய் நம்ம வீடு சுவாமி கோபுரத்தை விடவும் உயர்ந்து போயிடும். அதனாலே...''

''அதனாலே...?''

''முதல்லே சுவாமி கோபுரம் உயர்ந்துடணும். அதுக்கு ஐந்து நிலைகளும் பூர்த்தியாகணும். அப்பத்தான் நாம் கட்டப் போற மூனு மாடி பில்டிங் தாழ்வாத் தெரியும். சிதிலத்தைச் சரி பண்ணி, ஐந்து நிலைகளையும் சரி பண்ணிட்டாப் பிரச்னை இல்லை. அதனால் இப்ப நீ பண்ண வேண்டிய முதல் காரியம் லண்டன்லே உள்ள உன் ஃபிரண்ட்ஸுங்க, வேண்டியவங்க, தெரிஞ்சவங்க கிட்டே எல்லாம் கோபுரத்தைப் புனருத்தாரணம் பண்ண உதவி வேணும்னு கேளு. ஒரு பெருந்தொகை சேர்ந்ததும் அதைப் பண்ணிடலாம். சம்பிரதாயம் வழுவாம இருக்கும்'' என்றார் மகாதேவன் அமைதியாக.

ஒரு நிமிட யோசனைக்குப் பின் அப்பாவின் ஆலோசனையை ஏற்றுக் கொண்டான் ஸ்ரீகாந்த்.

ஒரு சம்பிரதாயத்தைக் காரணம் காட்டி, ஓசைப்படாமல் ஒரு திருப்பணிக்கு அஸ்திவாரமிட்டு விட்ட மகாதேவன், வெகு நிதானமாக அபிராமி அந்தாதியில் மூழ்கலானார்.



* மனைவியுடன் ஆட்டோ சங்கர்.

## ஆட்டோ சங்கர் வழக்கு

# அப்புறம் என்ன ஆச்சு?

லலிதா என்ற பெண் உட்பட ஐந்து பேரைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கைதானவர்கள் 'ஆட்டோ' சங்கரும் அவரது நண்பர்கள் பதினோரு பேரும். முதலில் ஒரு வருடம் குண்டர்கள் சட்டத்தில் உள்ளே தள்ளப்பட்டார்கள். கைதானவர்களில் பாபு என்பவர் அப்ரூவராக மாறிவிட்டார். சைதாப்பேட்டை இரண்டாவது ஜுடிஷியல் மாஜிஸ்திரேட் கோர்ட்டில், குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டது. அப்ரூவர் பாபுவின் சாட்சியத்துக்குப் பிறகு, வழக்கு செங்கல்பட்டு செஷன்ஸ் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டது. குண்டர்கள் சட்டப்படி தண்டனைக் காலம் ஒரு வருடம் முடிந்ததும், மேற்கொண்ட கொலைகள் தொடர்பாக, தொடர்ந்து ஜெயிலில் வைக்கப்பட்டனர் ஆட்டோ சங்கரும், அவரது நண்பர்களும். ஜாமீன் கேட்டுப் போடப்பட்ட மனு, ஹைகோர்ட் வரை தள்ளுபடி செய்யப்பட்டது. வரும் ஜூன் மாதம் செஷன்ஸ் கோர்ட்டில், முழு விசாரணை ஆரம்பமாகப் போகிறது. கிட்டத்தட்ட 250 சாட்சிகள்.

இதற்கிடையில் ஆட்டோ சங்கருக்கு 'அனுதாபம்' காட்டியதற்காகச் சஸ்பெண்ட் செய்யப்பட்ட துணை கண்காணிப்பாளர் தங்கையா, மீண்டும் பணிக்கு வந்து விட்டார். போலீஸ் துறையில், அதுவும் மதுவிலக்குத் துறையில், அதுவும் சொந்த ஊரில் போஸ்டிங் வாங்கி உள்ளார். பதினெட்டுப் போலீஸ்காரர்கள் இன்னும் சஸ்பெண்ட் நிலையிலேயே இருக்கிறார்கள்!

— கௌசல்யா

**ஏ**தோ ஒரு மன ஆறுதலுக்காகத் தமது சோகக் கதையை பாபு சொல்கிறார் என்று தான் வந்தனா நினைத்துக் கொண்டிருந்தாள். அதன் முடிவில் அரவிந்தைக் கொண்டு வந்து நிறுத்துவார் என்று எதிர்பார்க்கவில்லை.

''நீங்க கேக்கறது எனக்கு சரியாப் புரியலையே!''

பாபு மெதுவாகச் சிரித்து, ''புரியலையா, இல்லை புரிஞ்சுக்க விரும்பலையா? இது முழுக்க, முழுக்க உங்க சொந்த விவகாரம். ஆனா உங்களை விட வயசிலேயும், அனுபவத்திலேயும் மூத்தவன்ங்கிற உரிமையில கேக்கிறதா வச்சுக்கங்களேன். ஒரு தூய்மையான காதலை ஏன் வீம்பா வெறுக்கணும்?''

தன் வளையல்களை நெருடிக் கொண்டிருந்த வந்தனா சட்டென்று நிமிர்ந்தாள். ''மன்னிக்கணும் சார். அது தூய்மையான காதல்னு நீங்க எப்படி முடிவுக்கு வந்தீங்கன்னு எனக்குத் தெரியலையே. நீங்க பேப்பர்ல வந்த செய்தியையும், அவரோட பேட்டியையும் படிச்சுட்டு மட்டும் பேசறீங்க.''

பாபு அவசரமாகத் தம் தலையை மறுப்பாக அசைத்தார்.

''இல்லைங்க வந்தனா. முழுக்கத் தெரியாம ஒரு விவகாரத்தில நான் தலையிட மாட்டேன். ரேடியோ ஸ்டேஷன்ல வேலை பார்க்குதே உங்க ஃப்ரெண்டு கவிதா. அந்தப் பொண்ணு என்கிட்டே சகஜமா பேசும், பழகும். நடந்ததெல்லாம் அந்தப் பொண்ணு சொல்லிச்சு. அரவிந்த் படிப்படியா உங்களை அணுகினது நீங்க வேலையை கோபமா ராஜினாமாச் செஞ்சது, இதெல்லாமும் சொல்லிச்சு. அதனாலதான் நீங்க வழக்குப் போட்டு, இப்படி வீம்பாச் செயல்படறது கொஞ்சம் அதிகப்படியான ரியாக்ஷனா எனக்குப் பட்டுச்சு. என் மனசில பட்டதால — அதுவும் தோதா சந்தர்ப்பம் வாய்ச்சதால சொன்னேன். கொஞ்சம் முன்னாடி சொன்னீங்களே ஆம்பளைங்க அத்தனை பேரும் சுயநலம் பிடிச்சவங்க, பொம்பளைங்க எல்லாம் தியாகிங்கன்னு... அந்தக் கண்ணோட்டம் தப்புன்னு உணர்த்தறதுக்காகத்தான் என் மனைவி



21

பட்டுக்கோட்டை பிரபாகர்

பத்தி விவரமாச் சொன்னேன். அந்தக் கண்ணோட்டத்தில நீங்க இருக்கிறதால தான் அரவிந்த்தோட செயல்கள் எல்லாம் உங்களுக்கு எதிர்மறையாவே படுதோன்னு நினைச்சுத்தான் கேட்டேன். மத்தபடி அந்த அரவிந்த் கறுப்பா, சிவப்பான்னு கூட எனக்குத் தெரியாதுங்க. நான் அத்து மீறிக் கேட்டிருந்தா ஸாரிங்க...'' என்றார் பாபு.

மேற்கொண்டு என்ன பதில் சொல்வது என்று புரியாமல் சில நிமிடங்கள் தன் விரல் நகங்களையே பார்த்துக் கொண்டிருந்தாள் வந்தனா.

சசிகலா வீட்டுக்குள் ஓடி வந்து தன் அப்பாவைக் கட்டிக் கொண்டு, ''அப்பா, அப்பா'' என்று மூச்சிரைத்தாள்.

''என்னம்மா?'' என்றார் பாபு.

''பக்கத்து வீட்டு ராஜா அவங்கப்பா, அம்மாவோட சினிமாவுக்குப் போறானாம். விளையாடினது போதும்னு என்னை அனுப்பி வச்சிட்டான். நீயும் என்னை சினிமாவுக்கு அழைச்சிட்டுப் போப்பா.''

''அப்பாவுக்குக் கையில காயமா இருக்குதில்லே... ரெண்டு நாள் கழிச்சு அழைச்சிட்டுப் போறேன்.''

வந்தனா எழுந்து கொண்டாள். ''அப்போ நான் புறப்படறேன் சார். நல்லா ரெஸ்ட் எடுங்க. உதவிக்கு யார் இருக்கா? நான் ஏதாவது ஹெல்ப் பண்ணணுமா?''

''இல்லை, வேணாங்க. ஒரு வேலைக்காரப் பொண்ணு வரும். ஒண்ணும் பிரச்னையில்லை. என் கதையைச் சொல்லி நான்தான் போரடிச்சுட்டேன்.''

''இல்லைங்க. நிச்சயமா இல்லை. எனக்குப் புதுசா சில விஷயங்களைச் சொல்லியிருக்கீங்க. நீங்க அரவிந்த் பத்திக் கேட்டதில எனக்கு எந்த வருத்தமும் இல்லைங்க. நான் வர்றேன்ம்மா சசிகலா.''



சசிகலாவைத் தூக்கி அவள் இரண்டு கன்னங்களிலும் முத்தமிட்டு இறக்கிவிட்டு விட்டு, செருப்பணிந்து நடந்த போது, வந்தனாவின் மனம் கனத்துப் போயிருந்தது.

கபடமின்றிக் கை வீசிச் சிரிக்கும் இந்த மழலைக்குத் தன் தாயைப் பற்றின கசப்பான செய்திகள் அறிய வரும் போது எத்தனை வேதனையாக இருக்கும்?

வந்தனா சிந்தனையுடன் நடந்து பஸ் ஸ்டாப்பிற்கு வந்தாள்.

**அ**ரவிந்தின் அறைக் கதவில் விரல் முட்டியால் இரண்டு முறை தட்டி விட்டு, ''நான் உள்ளே வரலாமா?'' என்றான் கிருஷ்ணன்.

தனது கட்டிலில் மல்லாந்து படுத்திருந்த அரவிந்த், தலையை மட்டும் திருப்பி, அறை வாசலில் கதவைப் பாதி திறந்து பிடித்தபடி நின்ற கிருஷ்ணனைப் பார்த்தான்.

''வா'' என்றான்.

கிருஷ்ணனுக்கு அரவிந்தை உற்சாகம் குன்றி, இருண்ட, முள் தாடியுடன் கூடிய முகத்துடன் பார்ப்பது இதுவே முதல் தடவை.

''அரவிந்த், நீ அடிச்சி விரட்டினாலும் பரவாயில்லை, உன்னைப் பிடிவாதமா பார்த்துடணும்னுதான் வந்தேன். என்னடா இப்படி இருக்கே? என்னமோ ரெண்டு மாசம் ஜுரத்தில விழுந்து எழுந்திரிச்சவன் மாதிரி... என்னடா இது கோலம்?''

கிருஷ்ணன் கட்டிலில் அவன் அருகில் அமர்ந்தான். அரவிந்த் தன் முதுகுக்குப் பின்னால் ஒரு தலையணையைக் கொடுத்துச் சாய்ந்து அமர்ந்து கொண்டு, ''அதெல்லாம் ஒண்ணுமில்லை. ஸாரி, அன்னைக்கு இருந்த ஆத்திரத்தில் உன்னைக்கன்னாபின்னான்னு திட்டிட்டேன்'' என்றான்.

கிருஷ்ணன், ''வித் யுவர் பர்மிஷன்'' என்று தன் சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான். முதல் புகையை ஆழமாகச் சுவாசித்து விட்டு, சிகரெட்டின் நெருப்பு முனையைப் பார்த்துக் கொண்டு, ''ஏதோ விளையாட்டா நான் சொன்ன யோசனை இவ்வளவு தூரம் பெரிசாகும்னு நான் நினைக்கவே இல்லை. நீ திட்டினதில நியாயம் இருக்குடா. உனக்கு அதுக்கு உரிமையும் இருக்கு'' என்றான்.

''சரி விடு. தப்பு உன் பேர்ல இல்லை கிருஷ். நீ யோசனை சொன்னப்போ, அதை நான் மறுத்திருந்தா விவகாரமே இல்லை. உள்ளே ஓர் ஓரத்தில கிடந்த பிசாசு மனசு உடம்பை முறுக்கிக்கிட்டு எழுந்திருச்சிடுச்சு. இதே ரூம்லதானே... ச்சே! நான்தானா அவ்வளவு கேவலமா நடந்துக்கிட்டேன். இன்னும் என்னால நம்பவே முடியலை கிருஷ்.''

''நீ அப்போ போதைல இருந்தே

அரவிந்த்.''

''அது மட்டும் காரணமில்லை கிருஷ். எப்படியாவது வந்தனா என் காதலை ஏத்துக்க மாட்டாளான்னு ஒருவித வெறியே இருந்தது. விடு. பழசைப் பேசறதால பிரயோஜனம் இல்லை. பரிகாரமும் இல்லை.''

''பரிகாரம் தேடற அளவுக்குப் பெரிசா எதுவும் தப்பு நடந்துடலை அரவிந்த். ஆனா நீ தப்பைத் தப்புன்னு உணர்ந்தப்பவே பாவம் சரியாப் போச்சு. அவ குடும்பத்தாரைப் பார்த்து கண்ணியமா உன் எண்ணத்தைச் சொன்னியே... அப்பவே சரியாப் போச்சு. அவங்களுக்கெல்லாம் புரிஞ்ச நியாயம் அவ ஒருத்திக்கு மட்டும் புரியலையே.''

''அதான் என்னோட பேட் லக்! அவளுக்கு புரிய வைக்க முடியாததுதான் என்னோட பெரிய தோல்வி.''

''அப்படியெல்லாம் இல்லை அரவிந்த். நீதான் இதை ரொம்பப் பெரிசா எடுத்துக்கறே. ரொம்ப உணர்ச்சிவசப்படறே. விளைவுகளைப் பத்தி யோசிக்கவே மாட்டேங்கறே. நாளைக்குக் கேஸ் விசாரணைக்கு வருது. நீ சாதாரண ஆள் இல்லை. முக்கியமான புள்ளி. உனக்குக் கீழே நூத்துக் கணக்கான தொழிலாளிங்க வேலை பார்க்கறாங்க. இந்த விவகாரம் பத்திரிகை வரைக்கும் வரவே நீ விட்டிருக்கக் கூடாது. இன்னமும் நான் அந்தப் பொண்ணை நேசிக்கிறேன்னு பேட்டி வேற கொடுத்திருக்கே. உன்னோட இமேஜைப் பத்தியோ, தொழில் ஸ்தாபனங்களோட இமேஜைப் பத்தியோ நீ கவலையே படற மாதிரி தெரியலை. உன்னைப் புரிஞ்சுக்கவே முடியலை."

அரவிந்த் மௌனமாக அவனைப் பார்த்தான். முடிய இருந்த கிருஷ்ணனின் சிகரெட்டை வாங்கி அருகில் இருந்த அலங்காரப் பூந்தொட்டியில் புதைத்து அதன் கடைசி புகை நூலைப் பார்த்தான்.

''உங்கண்ணன் என்கிட்டே ரொம்ப நேரம் பேசினார் அரவிந்த். அவனுக்கென்ன பைத்தியம் பிடிச்சுப் போச்சான்னு சப்தம் போடறார். அவர் பிரமாதமான வக்கீல்களை ஏற்பாடு செய்றேன்னு உன்கிட்டே சொன்னாராம். வேணாம், நான் ஒத்துழைக்க மாட்டேன்னு சொல்லிட்டியாமே!''

''ஆமாம்.''

''உன் மேலே உள்ள குற்றச்சாட்டு என்ன தெரியுமா? கற்பழிக்க முயற்சி!''

''தெரியும். நான் எதையும் மறைக்கவோ, மாற்றவோ போறதில்லை. நடந்ததை அப்படியே சொல்வேன். அதுக்கு சட்டப்படி என்ன தண்டனை உண்டோ அதை அனுபவிச்சிட்டுப் போறேன். நான் மறுத்து வாதம் பண்ண நினைச்சாத்தானே வக்கீல் வேணும்? அதனாலேதான் வக்கீல் வேணாம்னுட்டேன்.''

''அரவிந்த், அந்தப் பொண்ணு மனசு மாறிடுவான்னு ஏதாச்சும் நம்பிக்கை வச்சிருக்கியா? இல்லைன்னா ஜட்ஜை எப்படியாச்சும் சரிக்கட்டி கடைசி சமயத்திலே மாத்திடலாம்னு நினைச்சிட்டிருக்கியா? எனக்கு எதுவும் புரியலை. சாதாரண அபராதம் விதிக்கிற தண்டனை இல்லை அரவிந்த் இதுக்கு. ஜெயில் தண்டனை. மூணு வருஷம், ஐந்து வருஷம், ஏன் ஏழு வருஷம் கூடப் போடலாம்.''

அரவிந்தின் முகத்தில் எந்தச் சலனமும் இல்லை.

''தெரியும் கிருஷ். போடட்டும். எத்தனை வருஷம் 'வேணும்னாலும் போடட்டும். ஜெயில் வாழ்க்கையையும்தான் கொஞ்ச நாள் வாழ்ந்து பார்த்துடறது!''

''விளையாட்டாப் பேச இது நேரமா அரவிந்த்?''

''நான் விளையாட்டாப் பேசலை கிருஷ். இவ்வளவு நேரம் நீ என்னைக் கேள்வி கேட்டே. இப்போ நான் உன்னைக் கேக்கறேன். பதில் சொல்றியா?''

## ஜேம்ஸ் பாண்ட் கட்டிய அபராதம்!

திரையில் அதிவேகத்தில் காரைச் செலுத்தும் ஜேம்ஸ்பாண்ட் நமக்குத் தெரியும்.

ஜேம்ஸ்பாண்ட் நடிகர் ஷின் கானரி, நிஜ வாழ்க்கையில், சென்ற மாதம், மணிக்கு 128 கி.மீ. வேகத்தில் காரைச் செலுத்தியதால் கலிபோர்னியாவில் போலீஸாரால் மடக்கப்பட்டார்!

சோதனையில், ஜேம்ஸ்பாண்ட் ஓட்டியது வாடகைக் கார் என்றும் அவரிடம் கார் ஓட்டுவதற்கான லைஸென்ஸே இல்லை என்றும் தெரிய வந்தது!

ஷின் கானரி 190 டாலர் அபராதம் கட்டினார்!

தகவல்: லியோ மஹேந்திரநாத்.

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்



''என்ன, கேளு.''

அரவிந்த் ஒரு தலையணை எடுத்துத் தன் மடி மேல் வைத்துக் கொண்டு, ''கிருஷ், வந்தனா தன் பேர் எப்படி அடிபட்டாலும் பரவாயில்லை. தன்னை வரவழைச்சு அவமானப்படுத்தின எனக்கு உரிய தண்டனை கிடைக்கணும்னு நினைச்சுத்தானே இவ்வளவு துணிச்சலாக் கேஸ் போட்டிருக்கா?'' என்றான்.

''ஆமாம். ஊர்ல உலகத்தில யாருக்குமே இல்லாத தன்மானம் இவளுக்கு மட்டும் பொத்துக்கிச்சு!''

''கரெக்ட்! கிருஷ், ஆரம்பத்திலேர்ந்தே அவகிட்டே என்னைக் கவர்ந்த விசேஷ அம்சமே அந்தத் தன்மானம்தான். அதிலே அவ காட்ற பிடிவாதத்தை இப்பவும் ரசிக்கிறேன். அந்தத் தன்மானம் ஜெயிக்கணும் கிருஷ். அவ மனசு திருப்தியாகிக் குளிரணும். அதுக்காக நான் எந்தத் தண்டனைக்கும் தயாராயிட்டேன். என் தோல்வியிலதான் அவளுக்குச் சந்தோஷம்னா நான் தோத்து அந்தச் சந்தோஷத்தை அவளுக்குத் தர விரும்பறேன். அட் எனி காஸ்ட்! என் இமேஜ் அதுக்கு விலைன்னா அதையும் நான் தரத் தயாராயிட்டேன். நான் ஜெயிலுக்குப் போறதுதான் அந்த விலைன்னா அதுக்கும் தயார். அப்பவாவது நான் காமுகன் இல்லை, சதைப் பசியோட அவகிட்டே பழகலை, அவ மனசை நேசிச்சேன், நேசிக்கிறேன்னு அவ உணர்ந்தான்னா அது போதும். என்னோட நேசிப்பு களங்கமில்லாததுன்னு அவளை உணர வச்சிட்டேன்னா அதுதான் எனக்கு வெற்றி. அந்த வெற்றிதான் எனக்கு முக்கியம்.''

தலையை குறுக்கில் அசைத்தான் கிருஷ்ணன், ''ம்கூம். உன்னை எப்படி மாத்தறதுன்னு எனக்குப் புரியலை. உன் அனுமதி இல்லாம நான் ஒரு தடவை வந்தனாவை சந்திச்சு மனம் விட்டுப் பேசிப் புகாரை வாபஸ் வாங்கிக்கச் சொன்னேன். அவ மசியலை. எடுத்தெறிஞ்சி பேசிட்டா. இப்போ... வந்து.. உங்கண்ணன் வந்தனாவைப் போய்ப் பார்த்துப் பேசிட்டு வரலாமான்னு என்னைக் கேட்கச் சொன்னார். உன் சம்மதத்தோட நான் வருவேன்னு எதிர்பார்த்து ரூமுக்கு வெளியிலே அவர் காத்துக்கிட்டிருக்கார் அரவிந்த்.''

''நோ!'' என்று கத்தினான் அரவிந்த். ''யாரும் போகக் கூடாது. என் பிரச்னை. இதிலே யாரும் தலையிடக் கூடாது.''

''மன்னிக்கணும் சார். இது உங்க சொந்த பிரச்னை மட்டுமில்லை,'' என்று குரல் கேட்க, இருவரும் திரும்பிப் பார்க்க, ''வரலாமா சார்?'' என்று உள்ளே வந்தார் கம்பெனியின் மேனேஜர் சில ஃபைல்களுடன்.

(தொடரும்)

• • • •



''டீ.வி.யில் நான் ரசித்த காட்சி பற்றிய போட்டிக்குப் பத்தாயிரம் ரூபாய் பரிசு தர்றாங்களாமே?''

''அப்படி ஒரு காட்சி நிச்சயமா இருக்காது என்கிற நம்பிக்கையினாலதான்!''

— மீனவன்.

• • • • • • • • • • • • •



''இன்னும் ஒரு வாரத்துக்குள் உங்களுக்கு ஆபரேஷன் பண்ணியாகணும்...''

''இல்லைன்னா என்ன ஆகும் டாக்டர்...?''

''வாடகை பாக்கியைக் கட்ட முடியாமல் நான் கிளினிக்கைக் காலி பண்ண வேண்டி வரும்!''

— இரா. நாகராஜன்.

• • • • • • • • • • • • •

''உங்கப்பா மாதிரி ஒரு நேர்மையான ஆளை நான் பார்த்ததே இல்லைடா.''

''எப்படிச் சொல்றே?''

'''என் மகனோடெல்லாம் சேர்ந்து பழகாதே தம்பி... கெட்டுப் போயிடுவே'ன்னு சொன்னாரே...!''

— அ. தெய்வசிகாமணி.



# "மிளகாய்த் தோட்டத்திலிருந்து வந்தீர்களோ!"

* 'மண்டேலா சென்னையில் சிறை வைக்கப்பட்டிருந்தால்...' என்ற அகிலா கார்த்திகேயனின் கற்பனை அபத்தம்! ஜீரணிக்க முடியவில்லை!

மேல்பட்டி, எல். மாறன்.

* 'மண்டேலா சென்னையில் சிறை வைக்கப்பட்டிருந்தால்...' — அகிலா கார்த்திகேயன் ஜோக்ஸ் வடிவில் தொகுத்து அளித்ததை ரசித்துச் சிரித்தோம். பாராட்டுக்கள்!

சீர்காழி, சன்பை. சிவ. சண்முகம்.

* இன்றைய நாகரிக உலகத்தில் அதுவும் இந்த அவசர யுகத்தில் 'ஆடைகள்' பற்றிய கட்டுரை வெகு அற்புதமாய் அலசப்பட்டிருந்தது. குறிப்பாக பிளாட்பாரத்தில் உள்ள ரெடிமேட் கடை முதல் மாடி மேல் உள்ள கடை வரை நீங்கள் நடத்திய ஆய்வும் அலசலும் உண்மையிலேயே பாராட்டத்தக்கது. பயனுள்ளது.

புதுவை — 5.
சோலைநகர் என். கே. வேலு.

* அவசர யுகத்தின் ஆடைகள் கவர் ஸ்டோரி படித்தேன். குடும்ப வேலைப் பளுவின் நடுவே துணி எடுத்துத் தைக்க கொடுத்து அதிகக் கூலி கொடுத்து அவதிப்பட்டு நிற்பதை விட, ரெடிமேட் ஆடைகளை எடுத்துச் சிரமமில்லாமல் உடுத்திக் கொள்வது எவ்வளவோ மேல் என்ற முடிவுக்கு வந்து விட்டேன்.

மயிலாடுதுறை — 1, எஸ். சித்ரா அர்ச்சுனன்.

* 'கன்ஸ்யூமர் ஆக்ஷன் க்ரூப்' அலுவலகத்தில் வேலை செய்யும் அனைவருக்கும் எவ்வளவு பொறுப்பு, சமூகப் பணி உணர்ச்சி என்பதைக் கட்டுரை நன்றாக உணர்த்தியது. சுயநலம் கலக்காத இவர்களது பொதுநலப் பணி மேலும் விரிவாக வளர்ந்து மக்களை நல்வழியில் அழைத்துச் செல்லும் என்ற நம்பிக்கையுடன் வாழ்த்துகிறேன்.

சென்னை — 39,
அ. க. கிருட்டிணன்.

* 'போராளிகளுக்கு இடம் தராதீர்கள்!' என்று நயமாக முதல்வருக்கு உணர்த்தியது கல்கியின் தலையங்கம். ஆயுதங்களைத் துறந்து, வன்முறையை விட்டொழித்து, என்று விடுதலைப் புலிகள் திருந்துகிறார்களோ அன்றுதான் இலங்கையும், இந்தியாவும் நிம்மதிப் பெருமூச்சு விடும்.

திட்டக்குடி. அ. சரவணராசன்.

* 'போராளிகளுக்கு இடம் தராதீர்கள்' — தலையங்கம் காலம் உணர்ந்த எச்சரிக்கை. இதை முதல்வரும், வீரமணியும் உணராதது வேதனையைத் தருகிறது. எது எப்படியானாலும் தமிழகத்தை ஆயுதக் கிடங்காகப் பயன்படுத்துவதை எந்தத் தமிழனும் விரும்ப மாட்டான். போராளிகளுக்கு நமது ஆதரவு தேவைதான். ஆனால் அவர்களது தீவிரவாதங்களுக்கு, வன்முறைகளுக்கு நிச்சயம் நமது ஆதரவு கிடையவே கிடையாது.

சென்னை — 35, எஸ். வி. ராஜசேகர்.

* அப்பப்பா... இந்த வாரக் கார்டூன்கள் காரம்னா செம காரம்! நேராகப் பச்சை மிளகாய்த் தோட்டத்திலிருந்து வந்து படம் போடச் சொன்னீங்களா என்ன!

தஞ்சை, கவிஞர். வெற்றிப் பேரொளி.

* அபிமானியின் ''மனுஷத் தன்மை ஜிந்தாபாத்'' சிறுகதை வித்தியாசமான கோணத்தில் சிந்திக்கப்பட்டு எழுதப்பட்ட ஓர் அருமையான படைப்பு. மனித நேயம், மனிதத் தன்மைக்கு முன் மொழி வேறுபாடு இருக்காது என்பதைத் தெளிவாக விளக்கியது.

சென்னை — 66,
எஸ். அதிர்ஷ்டக்கனி.

* 'டைப்பிஸ்ட், ஷார்ட் ஹாண்ட் துறையில் வெற்றிகரமாகப் பணிபுரிய சில பயனுறு யோசனைகளை வெளியிட்டு என்னைப் போன்ற பல பேரின் புண்ணியத்தைக் கட்டிக் கொண்டீர்கள். நன்றிகள் கோடி!

கும்பகோணம், எஸ். வி. சுகன்யா ஸ்ரீ.

* 'என் உயிர்த் தோழன்' திரைப்பட விமர்சனம் வழக்கத்திற்கு மாறாக மட்டுமல்ல, சிந்திக்கத் தூண்டுவதாகவும் அமைந்திருந்தது. அநியாயங்களை மட்டுமே, அவலங்களை மட்டுமே காண்பிப்பதனால் என்ன பயன்? அதற்கு மாற்று எப்படி இருக்க வேண்டும் என்ற தெளிவைப் பாரதி ராஜா போன்ற இயக்குநர்கள் தெளிவாகக் காட்ட வேண்டும். அந்த ஆற்றல் அவர்களுக்கு இருக்கிறது. இந்தக் கருத்தைத் தங்களின் விமர்சனம் அமைதியாக — அழகாக — ஆழமாக உணர்த்தியுள்ளது. பாராட்டுக்கள்.

வேலூர்,
காமாட்சி சத்தியநாராயணன்.

* இந்த இதழில் வெளியான அனைத்துச் சிறுகதைகளும் முத்துக்களாய் இருந்தன.

மதுரை — 20, சி. மகேஷ்

## இப்படியும் சில 'பக்தர்கள்!'

* பழநிக்குத் தைப்பூசத்தை யொட்டிப் பாதயாத்திரை வரும் பக்தர்கள் பல நாட்கள் கடும் விரதம் இருந்து நூற்றுக்கணக்கான கிலோமீட்டர் தூரத்தை எவ்விதச் சிரமமும் இல்லாமல் நடந்து கடந்து வருகின்றனர். ஆனால் தாங்கள் பழநிக்குப் பாதயாத்திரை போய் வந்ததாக மற்றவர்களிடம் பெருமையடித்துக் கொள்ளவே சிலர், குறிப்பாக, அரசு அதிகாரிகளும் வங்கி உயர் அதிகாரிகளும் வருகின்றனர்.

'இவர்கள் பாதயாத்திரை வருவது கவர்னர் ப்ரோகிராம் மாதிரி சம்பந்தப்பட்ட கீழ் அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டு அவர்களை எங்கெங்கு சந்திக்க வேண்டும் என்ற விவரமும் வந்துவிடும். அதன்படி இங்குள்ள அதிகாரிகள் 'இவர்களை'ப் பழநியிலிருந்து இருபது கி. மீ. தூரத்தில் உள்ள ஓர் ஊரில் காலை டிபனுடன் சந்திக்க வேண்டும். டிபன் அவர்களுக்கு மட்டுமல்ல, அவர்களுடன் வரும் ஒரு கூட்டத்துக்கே வேண்டியிருக்கும். இதில், 'என்னய்யா, டிபன் இப்படி ஆறிப் போயிருக்கு' என்ற கமெண்ட் வேறு! அதிலிருந்து ஆரம்பிக்கும் தலைவலி 'இவர்கள்' வந்து தங்கி மறுநாள் கிளம்பும் வரை விடாது. ஏ. சி. ரூமுக்கு ஏற்பாடு செய்யப்படும் கஷ்டத்தை எழுதி மாளாது. இதனால் தைப்பூசம் என்றாலே இங்கே இருக்கும் அதிகாரிகளுக்கு அலர்ஜியாக உள்ளது. இப்படிப் பாதயாத்திரை வந்து 'இவர்கள்' என்ன புண்ணியத்தைக் கட்டிக் கொண்டார்களோ! பழநி முருகனுக்கே வெளிச்சம்!

பழநி. — 1, பழநி. கல்யாணம்.



ஜெயசித்திரா: புதிய அறிமுகம்

# விருதுகள் வேறு; வாழ்க்கை வேறு!

●● பிரும்மாண்டமான வால் போஸ்டர்கள் மூலம் தமிழ் சினிமாவை மெல்லத் தம் பக்கம் திசை திருப்பியவர் 'கலைப்புலி' எஸ். தாணு. மற்ற தயாரிப்பாளர்கள் ஒரு படத்திற்கு விளம்பரத்திற்கென்று சுமார் ஐந்து லட்சம் வரை செலவிடுவார்கள். தாணு 15 லட்சத்திற்கும் அதிகமாகச் செலவிடுகிறார். இவரது வெற்றிக்குக் காரணமே இந்த பிரும்மாண்ட போஸ்டர்கள் தான் என்று கூறுகின்றார்கள். பத்து ஆண்டுகளாக விநியோகஸ்தராக இருந்து, பின்பு தயாரிப்பாளராக உருமாறிய இளைஞர் இவர். சினிமாவில் எத்தனையோ விஷயங்கள் இருக்கின்ற போது தாணுவுக்கு எப்படி போஸ்டர் விஷயத்தில் கவனம் போயிற்று? அவரிடமே கேட்ட போது, "இது நான் விநியோகஸ்தராக இருக்கும் போது ஊர் சுற்றி அலைந்து கற்றுக் கொண்ட பாடம். ஸ்டார் வால்யூ, டெக்னிஷியன்ஸ் வால்யூ மாதிரி சினிமா போஸ்டர்களுக்கும் மகத்தான வால்யூ இருக்கிறது. நான் அதற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பரிசோதித்துப் பார்த்தேன், சக்ஸஸ்!" என்றார்.



அசோக்குமார்: விருது வேறு; வாழ்க்கை வேறு!

தாணு தற்போது 'புதுப்பாடகன்' என்ற படத்திற்கு இசையமைத்து முதன் முதலாக டைரக்‌ஷனும் செய்து கொண்டிருக்கிறார். விஜய்காந்த், அமலா, நடிக்கிறார்கள். விஜய் மற்ற படங்களுக்குக் கொடுத்த கால்ஷீட்களை எல்லாம் ஒதுக்கி விட்டுத் தாணுவின் படத்திற்கு முன்னுரிமை கொடுத்திருக்கிறாராம்!

●● அசோக்குமார் என்ற இருபத்திநான்கு வயது இளைஞர் துணிகளில் வண்ணச் சாயங்களைப் பூசி புதுப்புது அழகிய ஓவியங்களை வரையும் கலையினைச் செய்து வந்தவர். இந்தியாவின் பெரிய நகரங்களில் அசோக் குமாரின் கை வேலைப்பாடுகள் நிறைந்த அச்சடிக்கப்பட்ட அழகிய துணிகள் காட்சிப் பொருள்களாக வைக்கப்பட்டுப் பாராட்டுக்களைப் பெற்றுள்ளன. ஐரோப்பிய நாடுகளில் நடத்தப்பட்ட இந்தியக் கலை விழாக்களில் இவருடைய "பறவைகள்" பெரும் பாராட்டைப் பெற்றது. சென்ற ஆண்டு சிறந்த 'கைவினைக் கலைஞர்' என்று ஜனாதிபதி விருது பெற்றிருக்கும் அசோக்குமார், இப்போது சினிமாவில் ஆர்ட் டைரக்டராக அறிமுகமாக உள்ளார். "தஞ்சாவூர் மராத்தியர் குலத்தை சேர்ந்த பரம்பரைக் கைவினைக் கலைஞன் நான். இந்தக் கைத் தொழிலை நம்பி வாழ்க்கையை ஓட்டுவது கடினமாக உள்ளது. அரசும் எங்களை கவனிப்பதில்லை. எனவே, பிழைப்புக்காகச் சினிமாவை நோக்கித்தான் போக வேண்டியுள்ளது'..." என்கிறார் அசோக்குமார்.



தாணு: போஸ்டர்கள் மூலம் சாதனை!

●● முன்பெல்லாம் சினிமாவில் மார்கெட் இழந்தவுடன் நடிகைகள் பத்திரிகைகளில் கதை எழுதுவதுதான் வழக்கம். தற்போது படம் டைரக்ட் பண்ணக் கிளம்பி விடுகின்றார்கள். ஷீலா, ஸ்ரீபிரியா, ஜெயதேவி இவர்களைத் தொடர்ந்து இப்போது ஜெயசித்திராவும் டைக்டராகி விட்டார். 'புதிய ராகம்' என்ற படத்தினை இயக்கிக் கொண்டிருக்கிறார்.

— எஸ். பாலு.

# குண்டா? குழியா?

ஒரு பக்கா பேருந்து நிலையத்தைப் பெற்றதில் அப்பநாயக்கத்துக்காரர்களின் ஏக்கம் தீர்ந்தாயிற்று என்று எண்ணாதீர்கள். அங்குதான் விதியை விழுங்கி ஏப்பமிட்டது சதி.

'பனி இல்லாத மார்கழியா? பிணியில்லாத ஹாஸ்பிட்டலா? பெயரில்லாத பேருந்து நிலையமா?' என்று நகராட்சி நினைத்திருக்கக்கூடும். நகராட்சி உறுப்பினர்கள் கூடிப் பேருந்து நிலையத்துக்குப் பெயர் சூட்டத் தீர்மானித்தனர். நாடறிந்த நாலு தலைவர்களின் பெயர்கள் முன் மொழியப் பட்டன. அதைப் பின் மொழிய யாரும் முன்வரவில்லை. காரணம் கேட்டதற்கு மா. மா. கழக (மாசற்ற மாநிலக் கழகம்) உறுப்பினர் விளக்கினார்:

''ஏற்கெனவே அந்தத் தலைவர்களின் பெயர்களை மாவட்டம் முதல் மாவாட்டும் மிஷின் வரை, பல்கலைக் கழகங்கள் முதல், பஸ் கார்ப்பரேஷன் வரை வைத்தாயிற்று. மேலும் மதிப்பா நாம் பேர் வைச்சா ஜனங்க மத்தியிலே ரொம்ப மிதிப்பா அவங்க பேரு அடிபடுது. தலைவர் பக்கிரிசாமி பேரை பஸ் டிரான்ஸ்போர்ட் கார்ப்பரேஷனுக்கு வைச்சோம். இப்ப என்னாச்சு? 'பக்கிரிசாமி பூட்சா?' ன்னு கேட்கறாங்க. 'இந்த பக்கிரி சாமி எப்பவும் லேட்டு.' 'பக்கிரி சாமிங்களுக்குத் திமிரு ஜாஸ்தி... ஓவர் ஸ்பீடு போறானுங்க. சோமாறிங்க'ன்னு கன்னா பின்னான்னு ஜனங்க அவர் பேரை ரிப்பேர் பண்றாங்க...'' என்று சொல்லிக் கொண்டிருந்தபோதே மா. மா. கழக நகராட்சித் தலைவருக்கு நறுக்கென்று ஒரு ஐடியா பளிச்சிட்டது.

இப்படி வைக்கப்பட்ட பெயர்கள் படாத பாடுபடும் பட்சத்தில் எதிர்க்கட்சி ஆட்களின் பெயர்களை வைத்தால் வசதியாக இருக்கும் என்று நினைத்தவர், ''உறுப்பினர் கூறுவது போலப் பெரிய தலைவர்கள் பெயரை வைக்காமல் உள்ளூர்த் தலைவர் பெயரையே வைக்கலாம்னு நினைக்கறேன். மறைந்த எதிர்க்கட்சி எம். எல். ஏ. 'குண்டு வரதன்' பெயரை முன் மொழிகிறேன்'' என்றவர், தமது கட்சி உறுப்பினர்கள் சந்தேகமாகப் பார்ப்பதைக் கவனித்துக் கண் சிமிட்டி விட்டு அவர்கள் காதில் மட்டும்

அகிலா கார்த்திகேயன்



விழும்படி "இப்படி இட்டவாங்க... அந்த குண்டு வரதன் அப்பெல்லாம் நம்மை கன்னாபின்னான்னு எப்படியெல்லாம் திட்டியிருக்கான்... அவனை நாம் திட்டறதுக் குள்ளே பாதியிலே மண்டையைப் போட்டுட் டான். இப்போ 'பஸ் ஸ்டாண்ட்'க்கு அவன் பேரை வைச்சுட்டா நமக்கு ரெண்டு சௌகரியம். பஸ் ஸ்டாண்ட் ஏற்கெனவே நாறுது.. ஜனங்களும் 'குண்டு வரதன் சுத்த மோசம். குண்டு வரதனை நினைச்சாலே குமட்டிட்டு வருது'ன்னு நாராசமாப் பேசும் போது நம்ப காதுலே பாயாசமாக விழும். அதே சமயம் எதிர்க்கட்சி எம். எல். ஏ. வோட பெயரை வைச்சோம்னு நமக்கு நல்ல பேரு வேற... எப்படி ஐடியா?" என்றார்.

அவர் இப்படிக் கிசுகிசுத்தது, பிசு பிசுவென்று எதிர்க்கட்சி தா. தா. கட்சி உறுப்பினர்களை எட்ட, அவர்களும் சுதாரித்துக் கொண்டனர். அவர்கள் ஆளுங் கட்சித் தலைவரின் அத்தை பெயரான 'குழியாச்சி'யைத் தான் பேருந்து நிலையப் பெயராக வைக்க வேண்டுமென்று வம்பிழுத்தனர். குழியாச்சி என்றதும் தலை வருக்கு ஜுரம் கண்டது. கன்னத்திலும், கண்களிலும் கிண்ணமாய்க் குழி விழுந்த தன் அத்தை 'கம்' மாமியாரின் மறைந்த மட்டமான முகம் வட்டமிட்டு வாட்டியது. ஓர் அடங்காப்பிடாரியைப் பெத்துப் போட்டு விட்டு — தன் தலையில் கட்டி விட்டுச் செத்து விட்ட குழியாச்சி பெயரைப் பேருந்து நிலையத்திற்கு வைத்துப் பழி தீர்க்கலாமென்று ஒரு கண நேரம் அற்ப ஆசை ஏற்பட்டதென்னவோ உண்மை. இருப்பினும் இந்தச் சதி பத்தினிக்குத் தெரிந்தால் தன் கதி என்னாவது என்று நினைத்துக் கை விட்டார்.

"குண்டு வரதன்தான்" என்று மா. மா. கழக உறுப்பினர்கள் கூச்சலிட, "குழியாச்சிதான்" என்று தா. தா. கட்சி எதிர்க் கூச்சலெழுப்பக் கூட்டம் கலைந்தது.

**அ**ன்று இரவே மா. மா. கழக ஆட்கள் சுறுசுறுப்பாய்ச் செயல்பட்டனர். ரோட்டோரமிருந்த ஒரு தார் டிரம்மைத் தள்ளிக் கொண்டு வந்தனர். தட்டி, நீட்டி நன்றாக நீவி விட்டனர். 'குண்டுவரதன் பேருந்து நிலையம்' என்று தார்க்குச்சியில் எழுதி, நாலா பக்கமும் அலட்சியமாய்ச் சந்தனம் தெளித்துப் பொட்டோடும் பூவோடும் பஸ் ஸ்டாண்ட் நோக்கி எடுத்துச் சென்றனர்.

அதற்கு முன்பே தா. தா. கட்சி ஆட்கள் ஒரு சினிமா போஸ்டர் தட்டியை அபேஸ் செய்து, குட்டையும் நெட்டையுமாய்க் "குழி யாச்சி பஸ் நிலையம்' என்று எழுதிக் கலர் காகிதங்களை ஒட்டி, பலர் காணும் வண்ணம் ஊர்வலமாய் வந்து சேர்ந்திருந் தனர். இதைப் பார்த்த மா. மா. கழக அடிமட்டத் தொண்டன் அர்ச்சுனன், ஆத்திரமடைந்து தட்டியைத் தாக்கச் சென்று, சற்றுத் தயங்கினான். 'தட்டியைத் தாக்கலாம் தவறில்லை; தட்டியில் கெட்டி யாய் எழுதியிருந்த தலைவரின் மாமியார்க் கிழவியின் பெயர் கிழியுமே! அந்தப் பழி நம்மைச் சாருமே!' என்று ஓங்கிய கையோடு ஒய்யார போஸில் நின்ற அர்ச்சுனனைப் பார்த்துக் கேடி கிஷ்டன், "இப்படி ஜகா வாங்கினு தயங்கினுக்கிறயே அர்ச்சுனா.. நீ கிழிக்கப் போறது கிழவி பேராச்சேன்னு யோசனை பண்றது புரிது... ஆனா பழிக்கப் போறது இந்த கிஷ்டனைத்தான்" என்று கீதா உபதேச பாணியில் ஒரு சாதா உபதேசம் செய்தான். அவ்வளவுதான், கள்ளச் சாராயத்தில் கஞ்சாவைக் கலந்து குடித்தாற்போல், அர்ச்சுனன் பாய, மற்ற அடியாட்களும் போஸ்ட் ஆபீஸில் பேஸ்ட்

---

## சந்தோஷத்தின் கட்டுப்பாடு!

அந்த டாக்டருக்கு வயதாகி விட்டது. ஓய் வாக அமர்ந்திருந்தார். அவரைக் காண வந்த நண்பர் கேட்டார்: "ஏன் நீங்கள் சும்மா இருக்க வேண்டும்? பிராக்டிஸ் பண்ணலாமே?"

"எனக்குப் பார்வை மங்கி வருகிறது" என்றார் டாக்டர்.

"அதனால் என்ன? அறுவைச் சிகிச்சையா செய்யப் போகிறீர்கள்? வைத்தியம்தானே? நேரடி யாக இல்லாவிட்டாலும் உங்கள் பரந்த அனுப வத்தை மற்ற டாக்டர்களுக்கு யோசனை கூறப் பயன்படுத்தலாமே?"

அப்போது அந்த டாக்டர் சொன்னார்: "மருத்துவத் துறையில் நாளுக்கு நாள் முன்னேற்றங் கள் ஏற்பட்டு வருகின்றன. அவற்றை நான் படித்து அறிய வேண்டும். பிறகுதான் வைத்தியம் செய்ய வேண்டும். சதா படித்து என் அறிவை விருத்தி செய்து கொள்ள முடியாத போது, நான் வைத்தி யம் செய்வதும் கூடாது!"

கண்ணியத்துடன், தமக்குத் தாமே கட்டுப்பாடு விதித்துக் கொண்ட இந்த டாக்டர் யார்? காச நோய் சிகிச்சையில் நிபுணராக விளங்கி, அதற் கென்றே மருத்துவமனையும் உருவாக்கிய சந்தோஷம்தான். சுதந்திரா கட்சியில் இருந்து, பிறகு லோக தளம், ஜனதா தளம் எல்லாவற்றை யும் பார்த்து அண்மையில் காலமானவரேதான்.

லயன் டி. ஜே. ஜார்ஜ்.

கூறக் கேட்டவர்: ராஜ்.


© டாக்டர் சந்தோஷம்



●● 'விரைவாகச் செயல்படு' என்றால் பத்து நிமிட வேலையை அவசர அவசரமாக ஐந்து நிமிடங்களில் செய்து முடிப்பது அல்ல. கவனமும், நிதானமும் சிதறாமல் பத்து நிமிட வேலையைப் பத்தே நிமிடத்தில் முடிப்பதுதான் விரைவான செயல்!

— நார்மன் வின்செண்ட் பீல்.
தகவல்: புத்தனாம்பட்டி சி. மணி.

---

டுக்கு அலைமோதுவது போல அவனைத் தொடர்ந்தனர்

தட்டியைப் படக்கென்று பிடுங்கி மடக்கென்று இவர்கள் ஒடிக்க, எதிர்முனையிலிருந்து ஏகப்பட்ட சோடா பாட்டில் பறக்க, 'குண்டு வரதன்' தார் டிரம் போர்டு பெண்டு நிமிர்த்தப்பட... ஆரம்பித்தது 'பேர்'ராட்டம்! பேருந்து நிலைய மைதானம் யார் எல்லைக்குள் வருகின்றதென்று வரையறை செய்யாத நிலையில், இரு காவல் நிலையங்களும் தொல்லையின்றித் தூங்கின.

அந்த ராத்திரியில் ரவுண்ட் அப் வந்த 'வம்பு தும்பு' வார இதழ் நிருபர் இந்த நாலந்தரச் சண்டையை நாலு பக்கத்துக்கு எழுதி நாட்டுப் பிரச்னை ஆக்கினார்.

ஆட்சிக்கு வந்த ஆறு மாதங்களில் அரிசி, தண்ணீர்ப் பிரச்னைகளிலிருந்து ஆரம்பித்து, விலைவாசி, மின்சாரம் மற்றும் சம்சாரத்துக்குத் தேவையான சாதாரண பிரச்னை வரை ஒன்று விடாமல் தீர்த்து விட்ட கற்பனையில் ஹாய்யாக ஓய்வெடுத்துக் கொண்டிருந்த ஆளுங்கட்சி, இந்தப் பெயர்ப் பிரச்னை கிடைத்ததில் எக்ளேர் சாக்லெட்டைப் பார்த்த எல்.கே.ஜி. பையனானது. அதே சமயம் போராட சப்ஜெட்டே இல்லாமல் போர் அடித்துப் போய் உட்கார்ந்திருந்த எதிர்க்கட்சிக்குப் பத்து ரூபாய் கைமாத்து வாங்கப் போனவனுக்கு பத்து லட்சம் பம்பர் அடித்தாற் போல் இருந்தது.

குண்டு வரதனிடம் தாங்கள் கண்ட வரலாற்றுக் காரணங்களை ஆட்சியாளர்கள் கூற, தங்கள் விழிப் பார்வையில் 'சூழியாச்சி' தான் அப்ப நாய்க்கத்துக்காரர்களைக் குஷியாக்கும் என்று எதிர்க்கட்சி எடுத்துரைக்க, நாளொரு அறிக்கையும் பொழுதொரு போஸ்டருமாக திமிலோகப்பட்டது. எந்த மூலையிலோ இருந்த அப்பநாய்க்கன் பாளையம், தூர்தர்ஷனின் வழியாக ஆல் இண்டியாவிலும் பரவியது.

ஏமாந்த தொண்டன் ஒருவனை உசுப்பேற்றி மா. மா. கழக ஆட்கள் பஸ் நிலைய மைதானத்திலேயே தீக்குளிப்புப் போராட்டத்திற்கு ஏற்பாடு செய்தனர். மக்களும் கிரசின் கிடைக்காத காலத்தில் எப்படி தீக்குளிக்கப் போகிறாரென்று வேடிக்கை பார்க்கக் கூடினர். அவர்கள் நினைத்தது போலவே கிரசின் எங்கும் கிடைக்காமல் போகவே மா. மா. கழக ஆட்கள் பஸ் ஸ்டாண்ட் டீக்கடைக்காரரை அணுகி அவர் ஸ்டவ்விலிருந்த கிரசினைக் கேட்டனர். அவர் மறுக்கவே, இவர்கள் வெறுத்துப் போய் டீக்கடைக்காரரை பரோட்டா மாவாய்ப் பிசைந்தெடுத்துக் கடையிலிருந்த டீயை எல்லாம் ஆளாளுக்கு அள்ளிப் பருகினர். தீக்குளிப்புப் போராட்டம் டீக்குடிப்பு போராட்டமாகிப் பிசுபிசுத்தது.

தம் பங்குக்குத் தா. தா. கட்சித் தொண்டர்கள் சௌகர்யமாக உண்ணும் விரதம் மேற்கொள்ள ஏற்பாடு செய்தனர். ஒரு வேன் நிறைய இட்லி, பொங்கல், வடை, சித்ரான்னங்கள், பழ வகைகள் சகிதம் மைதானத்தை அடைந்தவர்களுக்கு அதிர்ச்சியாய் இருந்தது. யாரோ ஒரு குறும்புக்காரர் 'சாயங்காலம் வரை உண்ணும் விரதம்' என்ற அறிவிப்பு போர்டை 'சாகும் வரை உண்ணாவிரதம்' என்று மாற்றி எழுதியிருக்க, மக்களும் இவர்களைச் சூழ்ந்து உண்ணாவிரதமிருந்தால்தான் ஆயிற்று என்று அடம்பிடித்தனர். வயிறு பிழைத்தது வரதன் புண்ணியம் என்று விழுந்தடித்துக் கொண்டு ஓடித் தொண்டர்கள் தப்பித்தனர்.

இப்படி தினம் ஒரு கூத்தும் கணம் ஒரு கேளிக்கையுமாகி பஸ் ஸ்டாண்ட் மைதானம் எல்லோரையும் பரவசப்படுத்த, அந்த ஊர் தியேட்டர்கள் வெறிச்சோடிப் போயின. பேருந்து நிலையத்திற்கு, பஸ்கள் வரப் பயந்தன. பை—பாஸ் செய்தன! கடமையே என்று வந்த ஓரிரு பஸ்களும் தாங்கள் உள்ளே வந்தது மடமையே என உணரத் தொடங்கின. அவற்றை உச்சகட்டப் போராட்டமான டயர் கிழிப்புப் போராட்டம் உபாதைப்படுத்தின.

"குண்டா — குழியா" என்ற குழப்பமான பிரச்னையைக் கண்டும் காணாமலும் அப்படியே விட்டு விட்டு அரசாங்கம் தாற்காலிகமாக பேருந்து நிலையத்தை இழுத்து மூடிக் காவலுக்குக் கெட்டிக்காரர்களை எட்டுத் திக்கிலும் நிறுத்தியது.

அப்பநாய்க்கத்துக்காரர்கள் முன் போலவே வேற்றூரில் இறங்கி தங்கள் ஊருக்கு நிம்மதியாக நடக்கத் தொடங்கினார்கள்.

இந்தக் கதையைப் படித்து விட்டு, 'பஸ் நிலையத்தை இழுத்து மூடலாம்; பஸ்ஸை அந்தப் பக்கமே விடாமல் மாற்றுப் பாதையில் திருப்பி விடலாம்; ஆனால் ரயிலை எப்படி திசை திருப்புவது?' என்று ரயில்வே நிர்வாகம் தலையைச் சொறிந்து கொண்டிருப்பதாகக் கேள்வி.

# ஏழாவது இரவு

21

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்: அரஸ்..

"இந்த நிமிஷத்துல உங்க திட்டம் என்னன்னு எனக்குத் தெரியும்" என்று இன்ஸ்பெக்டர் கூறிய போது மாலினிக்கு அதிர்ச்சியாக இருந்தது.

அவளும் ரஞ்சனாவும் மேற்கொண்ட ஒவ்வொரு முயற்சியின் போதும் அதுபற்றி முன்னதாகவே தெரிந்து கொண்டு இந்த இன்ஸ்பெக்டர் குறுக்கிட்டிருக்கிறார். அவர் மட்டுமல்ல. அந்த இன்னொரு கோஷ்டியும் அப்படியே செயல்பட்டு வந்திருக்கிறது.

அது எப்படிச் சாத்தியம்?

இருவரும் தனித்தனியாகச் செயல்படுகிறார்களா? அல்லது இருவருக்குமிடையே வெளித்தெரியாத தொடர்பு ஏதும் உண்டா?

சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தாள். சொன்னாள்:












இன்ஸ்பெக்டர் இறங்கிக் கொண்டார். கார் புறப்பட்டது. அந்த வண்டியை அது வரையில் பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்த ஜீப் அவரருகே வந்து நின்றது. ஏறி அமர்ந்தார். ஓடத் தொடங்கியது.

மனம் விரைந்து செயல்பட்டது. யோசனைகள் புரண்டெழுந்து அடங்கிய போது, முடிவை நெருங்கி விட்ட உணர்வு ஏற்பட்டது.

ஆமாம். அவர் திட்டம் சரியானதுதான். எதிர்பார்த்த பலன் நிச்சயம் கிடைக்கப் போகிறது. நாளை ஒரு நாள் நிகழ்ச்சிகளும் அவர் நினைத்தபடியே நடந்து விட்டால், நாளை மறுநாள் இரவு விவகாரம் முடிந்து விடும்.

ஆமாம். ஏழாவது நாள் இரவு அவர் தேடிய விடை கிடைத்துவிடும்...









# காங்கிரஸ் சரிவுக்குக் காரணங்கள் என்ன?



நடுக்கம் ஏன்?



ஜமாய்த்து விட்டார்!

* மேலை பழ. நாகப்பன், சென்னை — 41.

**? பெண்களுக்கென்று தனி வகை சிகரெட் அறிமுகப்படுத்தியிருக்கிறார்களாமே?**

! ஆமாம். MS என்ற பெயரில். அதற்கு கிராக்கி இல்லாமல் போய்ச் சுருண்டு கொள்ளும் என்று எதிர்பார்க்கலாம். தப்பித் தவறி வெற்றி பெற்றால் இந்தியப் பெண் குலத்தினிடம் நமக்குள்ள பெரு மதிப்புக் கொஞ்சம் குறையவே செய்யும்.

* கிஷோர், திருச்சி.

**? தமிழில் சமஸ்கிருதம் போல் ஓசை நயம் இல்லாததால் என்று தொடங்கி மாலன் தந்திருக்கும் பேட்டி பற்றி...?**

! சமஸ்கிருதம் கம்பீர ஓசை நயம்; தமிழ் இனிய ஒலி நயம். அதில் நெஞ்சு நிமிரும்; இதில் நெகிழும். அது தந்தை மொழி; இது தாய்மொழி. இரு மொழிகளுமே நமக்கு வேண்டும்; தேவையற்ற விவாதங்கள் வேண்டாம்.

* என். பாலையன், தக்கோலம்.

**? மகாராஷ்டிராவில் இ. காங்கிரஸ் பெற்ற வெற்றிக்குக் காரணம் ராஜீவ் காந்தியா? சரத்பவாரா?**

! வெற்றிக்குக் காரணம் சந்தேகமில்லாமல் பவாரின் பவர்தான். ஆனால் அது எதிர்பார்த்த அளவில் வெற்றியாக அமையாததற்குக் காரணம், சந்தேகமில்லாமல் ராஜீவ் காந்திதான்.

* ஜி. இந்திரா, சென்னை — 40.*

**? தமிழகத் தேர்தல் தோல்விக்காக மூப்பனாரைக் குறை கூறிய காங்கிரஸ் மேலிடம் புதுவைத் தேர்தலில் தோல்விக்கு வாழப்பாடியாரை என்ன செய்யப் போகிறது?**

! தனித்து நின்று மூப்பனார் பெற்ற பத்து சதம்; ஜெயுடன் கூட்டணி அமைத்து வாழப்பாடியார் பெற்ற ஐம்பது சதத்தை விட உயர்வானது என்பதைக் காங்கிரஸ் மேலிடம் புரிந்து கொள்ளவா போகிறது? அப்படியெல்லாம் புரிந்து கொண்டு நியாய அரசியல் நடத்துவதாயிருந்தால் ராஜீவ் இன்னும் பதவியில் இருப்பாரே!

* தில்லை ராஜன், சென்னை — 53.

**? வெங்சர்க்காரை அனுப்பியும் இந்தியா வாங்கும் மரண அடி தொடர்கிறதே?**

! நல்லவேளை. நேற்று நடந்த ஒருநாள் பந்தயத்தில் வெங்சர்க்கார் முட்டை போட்டும் இந்திய அணி வென்று விட்டது. இறுதி ஆட்டத்தில் பங்கேற்க முடியும் என்ற நம்பிக்கையும் பிறந்திருக்கிறது. கிரிக்கெட் ரசிகர்களுக்கு முழு ஏமாற்றம் தவிர்க்கப் பட்டு விட்டது.

* அ. சண்முகசுந்தரம், சென்னை.

**? பத்மஸ்ரீ பட்டத்தின் கௌரவத்தைக் காப்பாற்ற வேண்டுமே என்று எண்ணும் போது நடுக்கம் ஏற்படுவதாகக் கமல் கூறியிருக்கிறாரே?**

! நடுங்க அவசியம் இல்லைதான். பத்மஸ்ரீ, பத்மபூஷண் பட்டங்கள் மதிப்பை இழந்து நீண்ட காலம் ஆகி விட்டது. கமலுக்கு இந்தப் பட்டம் ஒன்றும் புதிய பெருமை சேர்க்கவில்லை.

* முருகேசன், தேனி.

**? தமிழ் நாட்டில் தி. மு. க. வுக்கு ஆதரவு அதிகரித்து வருவதாகக் கூறுகிறாரே, கலைஞர்?**

! ஆமாம். சுமார் இரண்டரை லட்சம் வாக்குகள் வித்தியாசத்தில் தி. மு. க. தோல்வியுற்றுக் கொண்டிருந்த பழனி தொகுதியில், இப்போது ஒரு லட்சத்துக்கும் குறைவான வாக்கு வித்தியாசத்தில்தானே தோற்றிருக்கிறது? தேற்றிக் கொள்ள இதை விட அருமையான புள்ளி விவரம் ஏது?

* ஆர். ஸ்ரீதரன், கும்பகோணம்.

**? இந்திய ராணுவத்தைச் சமாளித்ததற்காக விடுதலைப் புலிகளுக்குத் தான் வீர வணக்கம் செலுத்துவதாகத் தமிழக முதல்வர் கூறி இருப்பது பற்றி?**

! பொறுப் பற்ற பேச்சு. சற்று யோசித்தால் ஒரு குழந்தைக்குக் கூட அவர் நிதானம் தவறி விட்டது புரியும். யானைக்கும் அடி சறுக்கும் என்பார்கள். முதல்வருக்கு அடிக்கடி சறுக்கி விடுகிறது.

* ஏரல் யோகா, சென்னை.

**? வட மாநிலங்களில் காங்கிரஸின் சரிவுக்குக் காரணங்கள் என்ன?**

! இ. காங்கிரஸ் ஆட்சியில் நிர்வாக ஊழல்கள்; உட்கட்சிப் பூசல்கள், ராஜீவின்

## நீங்கள் கேட்டவை — தராசு

மோசமான இமேஜ், வி. பி. சிங்கின் வளர்ந்து வரும் செல்வாக்கு.

* எஸ். சுந்தர், பாளையங்கோட்டை.

**? இந்திய அணியின் அடுத்த காப்டன் யார்?**

! அஸாருத்தீனைத் தொடர அனுமதிக்க மாட்டார்கள்! இந்திய டீம் முழுவதுமே மாஜி காப்டன்களாக இருக்கப் போகிற நாள் வெகு தூரத்தில் இல்லை!

* பி. ராஜசேகரன், மதுரை.

**? பம்பாயில் ஷண்முகாநந்தா அரங்கில் ஏற்பட்ட 'தீ' விபத்து பற்றி?**

! அதை நிறுவ பெருமுயற்சி மேற்கொண்ட டீ. வி. ராமானுஜத்தின் மறைவு முன்பு நமக்கு வருத்தமளித்திருந்தாலும், 'நல்ல வேளை, இதைக் காண அவர் உயிரோடில்லை' என்ற எண்ணம்தான் இன்று தோன்றுகிறது.

* ஏ. ஜே. மொய்தீன் பாஷா, சென்னை—52.

**? மேகம் தொகுதி வாக்களிப்பில் துணைப் பிரதமரின் வாரிசு நடத்திய வன்முறை குறித்து?**

! அந்தக் கொடுமை காரணமாகத் துணைப்பிரதமருக்கு ஏற்பட்ட தலைகுனிவு சற்றே நிமிர்ந்திருக்கிறது, மறு தேர்தல் நடத்தலாம் என்று அவரே தேர்தல் கமிஷனுக்கு சிபாரிசு செய்திருப்பதால். சௌடாலாவினால் அவர் தந்தைக்கு மட்டுமின்றி பிரதமருக்கும் ஏற்படும் தர்மசங்கடத்துக்கு ஒரு முடிவு காணும் வகையில் மறு தேர்தலில் மக்கள் நடந்து கொண்டு விட்டால் நல்லது!

* எஸ். யோகலிங்கம், சென்னை.

**? மன்னிக்க முடியாத குற்றம் எது?**

! வடக்கு — கிழக்கு மாகாணக் கவுன்ஸில் தன்னைச் சுதந்திர ஈழக் குடியரசின் தேசிய சட்டமன்றமாக அறிவித்துக் கொண்டதும் இதனைத் தவறு என்று சுட்டிக்காட்டி கருணாநிதி கூறாததும்தான். அவரே சொல்லா விட்டாலும் நமது மத்திய அரசு கண்டித்துள்ளதை வரவேற்று இவ் விஷயத்தில் தமக்குக் கருத்து வேற்றுமை இல்லை என்பதைத் தெளிவு படுத்தியிருந்தாலும் போதும். அதையும் செய்யலையே!

* கே. ரமேஷ்ராம், சென்னை.

**? சுயேச்சையின் ஆதரவுடன் பாண்டிச்சேரியில் தி. மு. க. கூட்டணி மந்திரி சபை அமைத்திருப்பது பற்றி?**

! நியமன அங்கத்தினர்கள் உதவியுடன் ஆட்சி தொடரும். ஆனால் கருணாநிதி பிரமாதப்படுத்துகிறது போல் இது அப்படி ஒன்றும் பெருமைப்படக்கூடிய வெற்றி அல்ல. பெருமைப்படக்கூடியவர்கள் பாண்டிச்சேரி மக்கள்தான். விபத்து காரணமான அனுதாப அலை, சினிமா மோக அலை, எம். ஜி. ஆர். அலை, ராஜீவ் அலை என்ற மாயைகளுக்கெல்லாம் அடிமைப்படாமல் ஆள்வதற்கும் எதிர்ப்பதற்கும் ஏறத்தாழ சம அளவில் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுத்து கொள்கை அரசியலுக்கு ஊக்கம் அளித்திருக்கிறார்கள்.



* இவரா? ....



* ...இல்லை, இவரா?

* ஆர். ராமரத்தினம், கோழிக்கோடு.

**? இந்திய — நியூஸிலாந்து கிரிக்கெட் போட்டியில் கபில்தேவின் பங்கு பற்றி?**

! வெங்சர்க்காருடன் சண்டை போட்டது மட்டும்தான் நினைவில் நிலைக்கப் போகிற நிகழ்ச்சி என்று எண்ணி வந்த வேளையில் ஒரு ரன் வித்தியாசத்தில் இந்தியா வெற்றி பெற கடைசி ஓவரில் உதவி ஜமாய்த்து விட்டாரே!

* எஸ். ராம்கோபால், சென்னை.

**? இ.காங்கிரஸ் உட்பூசலில் நடந்த கொலை பற்றி?**

! சிதம்பரமும் வாழப்பாடியாரும் ரயில் மறியல் நடத்துகிற அபத்தங்களை விட்டொழித்து விட்டு ஜனார்த்தனன்களும் ராஜலட்சுமிகளும் கட்சியில் சேராதிருக்க மறியல் நடத்தலாம். உண்ணாவிரதம் இருக்கலாம். காமராஜர் இருந்தால் இதைத்தான் உணர்த்துவார்.



* தமிழில் இல்லையா?



* பலியாவாரா?

* ரூ. 10 பரிசு பெறுபவர்:
ஜி. இந்திரா,
AP 412, I பிளாக் 19 வது தெரு,
திருவள்ளுவர் காலனி,
அண்ணாநகர் (மேற்கு)
சென்னை — 40.

## கலந்துரையாடல்

இந்துமதி — புஷ்பா தங்கதுரை

# "எனக்கே இப்போதான் தெரிஞ்சுது..."

**இ:** பொதுவா, நம்போன்ற எழுத்தாளர்கள் இரண்டுபேர் சந்தித்தால் இலக்கியம் பற்றித்தான் பேசுவோம். கதை என்ன என்பதுபற்றி பேசுவோம். ஆனுல் இலக்கிய மீட்டிங்குக்காக நாம வரலே.

**பு:** ஆமாம். ஆனு நம்மோட தனிப்பட்ட தேவைகளைப் பூர்த்தியானுல்தான் நாமும் கதை, இலக்கியத்தில் ஈடுபடமுடியும்.



**இ:** ஒரு நடுத்தரவர்க்க குடும்பத்திலே எப்படி வருவாயைப் பெருக்க வழிகளிருக்கோ, அதேபோல, வருவாயிலே பெரும்பகுதியை சேமிக்கவும் வழிகள் இருக்கு. உதாரணமா, அரசு தரப்பிலே, LIC, UTI போன்ற சேமிப்பு வகைகள். தனியார் துறைகளில் ஷேர்கள், பிக்ஸட் டெபாசிட்கள் என்று நிறைய வழிகளிருக்கு.

**பு:** ஆமாம். நீங்க சொன்னதைப்போல், கையிலுள்ள சேமிப்பை, ஓரளவு வட்டியுடன், நமக்கு தக்க தருவாயில் கைகொடுக்கும் சேமிப்பு முறைகளில் சிட்பண்டும் சிறந்ததே. ரொம்ப உபயோகமான முறை இது. இதை நான் உணர்ந்தது ஸ்ரீராம் சிட்பண்டில் சேர்ந்தபிறகுதான்.

**இ:** சார், சிட்பண்டுன்னு சொன்னீங்களே, சிட்பண்ட்ஸ் என்ருல் என்ன? எப்படி நடத்தறுங்கன்னு நீங்க கொஞ்சம் சொல்லணும். உங்களுக்கு தெரிஞ்சதை சொன்னீங்கன்னு, நான் அதை அறிஞ்சுக்கலாம்னு நினைக்கிறேன்.

**பு:** இந்த சிட்பண்டுலே எப்படி பணம் போடறது, எப்படி பணம் எடுக்கறது என்று எதுவுமே தெரியாதுன்னு சொன்னீங்க. அப்படின்னு பணத்தை எப்படி சேமிக்கிறீங்க? எப்படி வேண்டிய நேரத்திலே அதை உபயோகப்படுத்தறீங்க?

**இ:** நான் பணத்தை சேமிக்கணும்னு நினைத்தால் எனக்கு உடனடியா தெரிஞ்சது பாங்க். இல்லேன்னு தனியார் துறைகளின் பெரிய கம்பெனிகளிலே "பிக்ஸட் டெபாசிட்" போடுவேன். நான் இப்ப வெளியே கேட்டபோது என்ன சொல்ருங்கன்னு சிட்பண்டுலே பணம் கட்டினீங்கன்னு உங்களுக்கு பணம் இரட்டிப்பா ஆகறத்துக்கு வாய்ப்பு இருக்கு. அது இருக்கு, இது இருக்குன்னு சொல்ருங்க. எனக்கு என்ன ஏதுன்னு புரியலே. நீங்க சிட்பண்டோடு சம்பந்தப்பட்டிருக்கீங்க. உங்களுக்கு தெரிஞ்சதெல்லாம் எனக்கு சொல்லுங்க.

**பு:** சரி. நான் வேலே செய்யற இடத்திலே, மாசம் ஒவ்வொருத்தர்கிட்டே இருந்து ரூபாய் பத்து பிடிச்சு யாரு ஜாஸ்தி கேட்கருங்களோ அவங்களுக்கு கொடுத்து பிடிமானத்தை

பகிர்ந்துக்குவாங்க. அந்தக் காலத்திலே ரூ.100/- பெரிய தொகை. நமக்கு ரூ.100/- கிடைக்குமான்னு யோசிக்கும்போது, பத்துபேர் சேர்ந்து ஒரு இடத்திலே சீட்டு வச்சிருக்கோம். அதுல போட்டமுங்கன்னு உங்களுக்கு பணம் கிடைக்கும்னு சொல்லும்போது ஆச்சரியமா இருக்கும். உதாரணமா, ரூ.100/- சீட்டுன்னு வச்சுக்குங்க. இதுல நீங்க ரூ.80/- அல்லது ரூ.60/-ன்னு நீங்க கேட்டா, உங்களுக்கு குறைச்சலா யாரும் கேட்கலேன்னு உங்களுக்கு கிடைச்சுடும். இப்படித்தான் எனக்கு முதல்ல தெரிஞ்சது. அதுக்கு முன்னுலே சீட்டுபத்தி எனக்கும் ஒண்ணும் தெரியாது.

**இ:** இப்ப சீட்டு கம்பெனி நடத்தறுங்களே ஸ்ரீராம் சிட்பண்ட்ஸ் அவங்ககூட இதே முறையிலேதான் சீட்டு நடத்தறுங்களா? உங்களுக்கு இதனோட ஆதாயம் எல்லாம் என்னன்னு தெரியுமா?

**பு:** அடிப்படையா இந்த முறையிலே தான் எல்லோருமே செயல் பண்றுங்க. எங்க ஆபீசிலே சின்ன அளவிலே செய்யறதை, சிட்பண்டுலே பெரிய அளவிலே செய்யறுங்க.

**இ:** இப்ப சிட்பண்டுன்னு என்னே மாதிரி தெரியாதவங்களுக்கு, பத்திரிகை மூலமா அறிந்தும், உங்களைப்போன்ற சொந்த அனுபவமடைந்த சில பேரிடம் பேசி அறிந்துக் கொள்கிறோம். ஆனாலும் நமக்கு என்று சில சந்தேகங்கள் இருக்கின்றன. உதாரணமா, இதில் சேர்வதற்கு என்று எதாவது தனித் தகுதி தேவையா? நம்முடைய பணத்துக்கு எப்படி பாதுகாப்பு கொடுக்கறுங்க. அரசாங்கத்தின் விதிமுறைகள் ஏதாவது இருக்கான்னு தெரிஞ்சுக்க நான் ஆசைப்படுகிறேன்.

**பு:** இதில் சேர்வதற்கு என்று தனித் தகுதி ஒன்றும் தேவையில்லை. ஓரளவுக்கு வருவாயும் சேமிப்பின் சிறப்பையும் அறிந்திருக்க வேண்டும். அதைத்தவிர சமீபத்துலே, அரசாங்கம் பொதுமக்கள் பணத்துக்கு பாதுகாப்பு தர்றமாதிரி நிறைய விதிமுறைகளை அமுலாக்கி இருக்காங்க. அந்த விதிமுறைகளுக்கு உட்பட்டு இருந்தா அது நல்ல கம்பெனிதான்.

**இ:** சார், இவ்வளவு நேரம், சிட்பண்டுகளைப்பத்தி நிறைய சொன்னீங்க. இப்ப நீங்க எந்த கம்பெனியிலே பணம் கட்டிட்டுவரீங்க.

**பு:** நான் முதலிலேயே ஸ்ரீராம் சிட்பண்ட்ஸ்லே 4, 5 சீட்டு எடுத்திருக்கேன். நான் சொன்னது போல அது அரசாங்கத்தின் விதிமுறைகளுக்கு உட்பட்டு நடக்கிற கம்பெனி. மக்களாலேயே மக்கள் நலனுக்கு என்று நடத்தப்படும் இந்தக் கம்பெனி, சமீபகாலத்துலே ஒரு பெரிய மகத்தான மக்கள் இயக்கமா வளர்ந்து கொண்டிருக்கிறது.

**இ:** சார், நீங்க சொல்றதை பார்த்தா, இந்த ஸ்ரீராம் சிட்பண்டஸ் நல்ல கம்பெனியாகவும், அதே சமயத்துலே பெரிய கம்பெனியாகவும் இருக்கும் போலிருக்கே. நீங்க அதுல சேர்ந்து எப்படி பயனடைந்தீர்கள் என்று சொன்னீங்கன்னு எனக்கும் அது உதவியாக இருக்கும்.!

(மீதி அடுத்த இதழில்)

**ராஜ்மோகன் காந்தி**

# தேசிய முன்னணிக்குத் தீவிர முயற்சி!

சுதேச சமஸ்தானங்களின் மாஜி மன்னர்களுக்கு அளிக்கப்பட்டு வந்த மான்யத்தை நிறுத்தி விட, அரசியல் சாசனத்தை மாற்றப் போவதாக இந்திரா அறிவித்த போது ஸி. ஆர். எழுதினார்:

''ஒரு வாக்குறுதியை முறிப்பதாக வாக்குறுதி அளிக்கிறார் இந்திரா! காந்திஜி இருந்தால் வெட்கப்பட்டு காதுகளைப் பொத்திக் கொள்வார். சர்தார் வல்லபபாய் பட்டேல் இருந்தால் அவர் கோபத்தின் உச்ச கட்டத்தை அடைவார். ஜவாஹர்லால்ஜி பயங்கரத்தை அடைந்து, ''இப்படியெல்லாம் நடந்து கொள்ளக் கூடாது'' என்று சத்தம் போடுவார்.''

ஆனால் இந்திரா முனைந்து நின்றார். மக்களவை, அரசியல் சாசனத்தை மாற்ற அனுமதி அளித்தது. ''தலையாட்டி பொம்மைகளாக இருக்காதீர்கள்'' என்று ஸி. ஆர். எவ்வளவோ எடுத்துரைத்தும் பயனில்லை. பழைய (ஸ்தாபன) காங்கிரஸ் எம். பிக்கள் பலர், இந்திராவுக்கு ஆதரவாகவே வோட்டளித்தனர். ஆனால் மாநிலங்களவையில் போதிய அளவு பெரும்பான்மை கிடைக்கவில்லை. உடனே மத்திய அரசு ஒரு மோசடி காரியத்தில் இறங்கியது! பழைய வைஸ்ராய்களிடமிருந்து இன்றைய ஜனாதிபதி, சில அதிகாரங்களுக்கு வாரிசு உரிமை பெற்றிருந்தார். ஒரு சமஸ்தானத்தில் யார் அடுத்த ராஜா என்பது வாதப் பிரதிவாதத்துக்கு உட்பட்டால் வழக்கில் வைஸ்ராய் நீதிபதியாக இருந்து தீர்ப்பு அளிக்கலாம். ஒருவரைத் தேர்ந்தெடுத்து ராஜாவாக்கி விட்டு மற்றொருவரது உரிமையைப் பறித்து விடலாம். வைஸ்ராயின் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தி எல்லா சுதேச சமஸ்தான மன்னர்களின் உரிமைகளையும் பறித்து விடத் தீர்மானித்தது மத்திய அரசு! மன்னன் என்ற உரிமையே போய் விட்டால், பிறகு மான்யத்துக்கு எப்படி உரிமை கொண்டாட முடியும்? ஜனாதிபதி கிரி இத்தகைய உத்தரவு ஒன்றில் மறுபேச்சின்றிக் கையெழுத்துப் போட, எல்லா சுதேச சமஸ்தான மன்னர்களின் எல்லாவித உரிமைகளும் மாயமாய் மறைந்து போயின!

''மத்திய அரசுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது!'' என்று எழுதினார், ஸி. ஆர். ஜனாதிபதியின் இந்த உத்தரவை சட்ட விரோதமானது என்று தீர்ப்பு வழங்கியது உச்ச நீதிமன்றம். ''நீதிமன்றம் இந்தியாவின் கௌரவத்தைக் காப்பாற்றியுள்ளது'' என்று கூறினார் ராஜாஜி.

தமது 91 வது வயதில் – 1969 இறுதியில் – கடைசியாக ஒரு பெருமுயற்சியில் இறங்கினார் ராஜாஜி. மெய்யான, சக்தி மிக்க, ஜனநாயக முன்னணி ஒன்றினை உருவாக்கத் திட்டமிட்டார். இந்திரா காந்தி ஆட்சிக்கு மாற்றாக, வேறு ஆட்சி அமைய இத்தகைய முன்னணி அவசியம் என்று கருதினார். ரங்கா, மஸானி ஆகியோரிடம் இதனை வற்புறுத்திக் கூறினார். ரங்காவைத் தொடர்ந்து மஸானி, 1970ல் சுதந்திரக் கட்சித் தலைவரானார். இவ்விருவரிடமும் ராஜாஜி, ''ஒரு தொடக்கமாக நாடாளுமன்றத்தில் ஜனநாயக அணியை அமையுங்கள்''

''ஒன்றுபடுங்கள்; ஒன்றுபடுங்கள்!''


* மசானி,


* நிஜலிங்கப்பா,


* வாஜ்பாயி...

என்று கேட்டுக் கொண்டார். திட்டம் ஆமை வேகத்தில் நகர்வதைக் காணப் பொறுக்க முடியாமல் ராஜாஜி தாமே, மக்கள் முன்னி லையில், "சுதந்திரக் கட்சியும் ஜனசங்கமும் பழைய (ஸ்தாபன) காங்கிரஸும் இணைந்து ஒரு மகத்தான கூட்டணி அமைக்க வேண் டும்" என்ற யோசனையைத் தெரிவித்தார். ஆனால் ஸ்தாபன காங்கிரஸ் சுறுசுறுப்பு காட்டவில்லை. மாறாக இந்திராவுடன் போட்டி போட்டுக் கொண்டு சோஷலிஸ கோஷம் எழுப்பி, மன்னர் மான்யங்களை ஒழிப்பது போன்ற யோசனைகளையே வெளியிட்டுக் கொண்டிருந்தது. ஆனாலும் ஜூன் இறுதியில் ஸி. ஆர். எதிர்பார்த்த இலட்சியம் கிட்டத்தட்ட நிறைவேறி விடும் போல் தோன்றியது. மொரார்ஜியுடன் ஸி. ஆர். பேசியதில் உற்சாகமடைந்தார்; காம ராஜரும் ஒத்துழைப்பது போல் காணப் பட்டார். ஒரு பொதுத் திட்டத்தை மசானி உருவாக்க அதனை ஜனசங்கத் தலைவர் வாஜ்பாயி மட்டுமின்றி ஸ்தாபன காங்கிரஸ் தலைவர்களும் ஏற்பது போல் தோன்றினர். ஸ்தாபன காங்கிரஸ், "தேசிய ஜனநாயக சக்திகள் ஒன்றுபட வேண்டும்" என்று அறிக்கை விட, ராஜாஜி பரவசமடைந்தார். "ஸ்தாபன காங்கிரஸுக்கு என் பாராட்டுக் கள்" என்று தலைப்புத் தந்து தலையங்கம் எழுதினார்.

சுயராஜ்யா அச்சாகி, மை உலர்வதற்கு முன் ஸ்தாபன காங்கிரஸின் மனம் மாறி விட்டது! நாடாளுமன்ற ஸ்தாபன காங்கிர ஸின் தலைவர் ராம்சுபா சிங், மூன்று கட்சி எம்.பிக்களும் உள்ளடங்கிய நாடாளுமன்ற அணி ஒன்று உருவாவதற்கு முட்டுக்கட்டை போட்டார். ஆழ்ந்த ஏமாற்றத்துடன் ஸி. ஆர். மசானிக்கு எழுதினார்: "விதியின் கட்டளைக்கு நான் உட்படுகிறேன். என்னால் முடிந்ததனைத்தையும் நான் செய்திருக் கிறேன். இப்போது துரதிர்ஷ்டத்துக்கு ஆட்படுவதைத் தவிர வேறு என்ன செய் வது? என் முயற்சிகளையெல்லாம் முட்டாள் தனமான கர்வமாகக் கருத வேண்டியது தான்."

தேசிய முன்னணி உருவாக வேண்டும் என்று ஸி. ஆர். கூறி ஓராண்டுக்கு மேலாகி விட்டது. ஆனால் அது உருவாவதற்கான அறிகுறிகள் ஒன்றையும் காணோம். "நத்தை களின் மீது சவாரி செய்து யுத்தத்தில் வெற்றி காண முடியாது" என்றார் ஸி. ஆர். "தலை வர்கள் நத்தைகளை விட்டுக் கீழே இறங்கி, உயர் ஜாதிப் புரவிகளின் மீது ஆரோகணிக்க வேண்டும்; பாய்ந்து தாக்கவும் வேண்டும்."

ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் நிஜலிங் கப்பா, ஏதாவது உருவாகும் என்ற நம்பிக்கை தமக்கு இருப்பதாகக் கூறிய போது, ஸி. ஆர்., "டார்வின் கொள்கையில் நிஜலிங்கப்பாவுக்கு நம்பிக்கை இருப்பதில்

எனக்கு ஆட்சேபணை இல்லை'' என்றார். ''ஆனால், டார்வின் தத்துவ விஞ்ஞானிகளை அவர் கேட்டுப் பார்த்தால் தெரியும், குரங்கிலிருந்து மனிதன் உருவாக எத்தனை காலம் ஆயிற்று என்று.''

சென்னைக்கு வந்து ராஜாஜியை சந்தித்த நிஜலிங்கப்பா, அவர் முகத்தில் காணப்பட்ட வருத்தத்தை உணர்ந்தார். ராஜாஜி அப்பட்டமான அறிவுரை வழங்கினார்.

''இனிமேல் நான் முழு முயற்சி எடுத்துக் கொண்டு எதிர்க் கட்சிகளின் தேசிய முன்னணிக்கு முயற்சி செய்வேன்'' என்றார் நிஜலிங்கப்பா.

''எனக்கு நம்பிக்கை மீண்டும் துளிர் விட்டிருக்கிறது'' என்று எழுதினார் ஸி. ஆர்.

ஆனால் நிஜலிங்கப்பா பலவீனமான மனிதராக இருந்தார். சொன்னதைச் செய்து காட்ட அவரால் முடியவில்லை. அதே நேரத்தில் இந்திரா ஒரு பந்தயக் குதிரையில் ஆரோகணித்துப் பாய்ந்து முன்னேறினார். அந்தக் குதிரையின் பெயர் தேர்தல்! டிசம்பர் இறுதியில், அவரது எதிரிகள், முன்னணி பற்றி ஒரு முடிவுக்கு வர முடியாமல் திணறிக் கொண்டிருந்த போது, தேர்தலுக்குச் சற்றும் தயாராக இல்லாத போது, அவர் நாடாளுமன்றத்தைக் கலைத்துத் தேர்தலை அறிவித்தார்! எதிர்க்கட்சிகளிடம் முன்னணி இல்லை, பொதுவான திட்டம் ஏதுமில்லை, பொதுவான தலைவர் இல்லை, பணமும் இல்லை. ராஜாஜி தொண்டை வரளக் கத்தியதும், கை ஒடிய எழுதியதும், கோபித்துக் கொண்டதும், நல்ல வார்த்தை கூறி திருத்த முயன்றதும் எல்லாம் வியர்த்தமாயின. நேசப்பான்மையுடன் கைகோத்து ஒத்துழைத்திருக்க வேண்டியவர்கள் மீது அவருக்குக் கோபம் கோபமாக வந்தது. ஆனால் இந்திரா மீதுதான் பழிசுமத்தி எழுதினார்: ''உரிய காலத்துக்கு ஓராண்டு முன்பாகவே தேர்தலைக் கொண்டு வந்தது இந்திராவின் தந்திரம்; இது நேர்மையாகாது'' என்றார். இருந்தாலும் தேர்தலைச் சந்தித்தே ஆக வேண்டும்; போராடியே தீர வேண்டும். ஸி. ஆர். அறைகூவல் விடுத்தார்:

''இதனைத் தேர்தலாக மட்டும் நான் கருதவில்லை 'அரசியல் சாசனத்தைக் கிழித்து எறிந்து விட்டு, ஜனநாயகத்தின் இடத்தில் சர்வாதிகார ஆட்சியைக் கொண்டு வருவது என்ற இந்திரா காந்தியின் திட்டத்துக்கு இந்நாடு ஒப்புதல் அளிக்கப் போகிறதா?' என்ற கேள்விக்கு மக்கள் வழங்கப் போகும் தீர்ப்பாகவும் இந்தத் தேர்தலைக் கருதுகிறேன். ஒன்றுபடுங்கள்! ஒன்றுபடுங்கள்!'' (சுயராஜ்யா 9.1.71)

(தொடரும்)

''எனக்கு அவனைப் பார்த்தாலே அலர்ஜி!''

வெகு சாதாரணமாக உபயோகிக்கப்படும் அலர்ஜி என்ற வார்த்தை மருத்துவத்திலிருந்து இரவல் வாங்கப்பட்டு அன்றாட வாழ்க்கையில் ஒட்டிவிட்டது.

அலர்ஜி என்றால் என்ன?

இதற்குத் தமிழில் ஒவ்வாமை (ஒத்துப் போகாதிருத்தல்) என்ற வார்த்தையை உபயோகிக்கிறார்கள், மருத்துவர்கள். ஆகாரப் பொருள், சுவாசத்தின் மூலம் உள்ளே செல்லும் புழுதி, மேலே தடவிக் கொள்ளும் களிம்புகள், பவுடர், சென்ட், சோப்பு இவற்றின் விளைவாக உடலில் அசாதாரணமாக உண்டாகும் ஒருவித உடல் மாறுதலை அலர்ஜி என்று சொல்லலாம். பெனிஸிலின் போன்ற மருந்துகளைப் பயன்படுத்துவதாலும் இம்மாதிரி உடல் மாறுதல் ஏற்படலாம்.

# கண்டாலே அலர்ஜி! உண்டாலே அலர்ஜி!

அலர்ஜி எதனால் ஏற்படுகிறது?

ஒவ்வொரு விநாடியும் மனிதன் மூச்சு இழுக்கும் போதும் உணவு உண்ணும் போதும் எண்ணிக்கைக்கு அடங்காத கிருமிகள், வைரஸ் மற்றும் புரதப் பொருட்கள் உடல் ஊடே செல்கின்றன. இவற்றுள் பல உடலுக்குக் கெடுதல் செய்யக்கூடியவை. இந்த அணுக்கள் அத்தனையையும் அன்னியம் என அறிந்து அடையாளம் கண்டு அவற்றிற்குத் தக்க எதிர் அணுக்களைத் தயார் செய்து, தவிர இம்மியூன் குளாபுலின் என்னும் எதிர் புரத இரசாயனத்தையும் தயார் செய்து இந்த உடல் எதிரிகளை அழிப்பது உடலுக்கு மிகவும் அவசியம். இதுதான் தடுப்புத் தன்மை ஆகும். இந்த உடலுக்கு உதவும் எதிர்ப்பு நிலை அளவு மீறிப் போனால் (over reaction) ஓர் ஒவ்வாமை நிலை ஏற்படுகிறது.

ஆக தடுப்புத் தன்மையும் ஒவ்வாமையும் உடல்நலனுக்காகவே ஏற்பட்டவை. ஒவ்வாமை செயலின்றிப் போனால் தொற்று நோய்களும் புற்று நோய்களும் உண்டாக ஏதுவாகிறது. இப்பொழுது உலகையே அஞ்சி நடுங்க வைத்துக் கொண்டிருக்கும் எய்ட்ஸ் என்னும் வியாதி இந்தத் தடுப்புத் தன்மை சீர்குலையக் காரணமாகிறது. அதனால்தான் உடல்நிலை கெட்டு மரணம் நேருகிறது.

ஆஸ்த்மா, தோல் அரிப்பு, எக்ஸிமா போன்ற வியாதிகள் குடும்பத்தில் யாருக்காவது இருந்தால் அலர்ஜி வர வாய்ப்பு அதிகம் உள்ளது. ஆனால் பெற்றோருக்கு ஆஸ்த்மா என்றால் பிள்ளைக்குத் தோலில் அலர்ஜி வரலாம் அல்லது அடிக்கடி சளி பிடிக்கலாம்.



இரண்டாம் பதிப்பின் வெளியீட்டு விழா: டாக்டர் லலிதா காமேஸ்வரன், நூல் பிரதி ஒன்றினைக் காலஞ்சென்ற டாக்டர். ஆ. மோகன்ராவின் புதல்வி தாரா மோகன் ராவுக்கு வழங்குகிறார்.

தற்கால மருத்துவத்தில் புதிய மருந்துகள் பல. அவை கூட அலர்ஜி உருவாக்குகின்றன. குடும்பத்தில் அலர்ஜி இல்லாமல் இருந்தால் கூட மருந்தினால் அலர்ஜி வருவதற்கு வழியுண்டு.

ஒருவருக்கு எதனால் அலர்ஜி வருகிறது என்று எப்படிக் கண்டுபிடிப்பது? நோயாளியிடம் பேசி அவரைப் பற்றிய முழு விவரங்களைத் தெரிந்து கொண்டு ஆகாரத்தினாலா, புழுதியினாலா, பூக்களின் மகரந்தத் தூளினாலா, காற்றில் பரவி இருக்கும் காளான் துகள்களாலா என்று சந்தேகித்து ஊகித்தறிய வேண்டும். சருமப் பரிசோதனை செய்தும், ரத்தத்தில் அலர்ஜியினால் உண்டாகும் ஆண்டிபாடி மூலமும் அலர்ஜியின் காரணத்தைக் கண்டுபிடிக்கலாம். சிலருக்குத் தலையணைப் பஞ்சு கூட அலர்ஜியைத் தோற்றுவிக்கும். இதற்கு பிளாஸ்டிக் உறை போட்டுத் தலையணையை மூடி, அதன் மீது துணி விரித்துப் படுக்க வேண்டும்.

அலர்ஜி ஏற்பட்டால் டாக்டருக்குத் தெரியப்படுத்திய பிறகே மருந்துகள் சாப்பிட வேண்டும்.

— **டாக்டர். கே. வி. திருவேங்கடம்**

ஆதாரம்: **குறைவற்ற செல்வம்**

**(இரண்டாம் பதிப்பு)**

**(பல்வேறு நோய்களைப் பற்றி அந்தத் துறையில் நிபுணர்களாக உள்ள டாக்டர்கள் எழுதியுள்ள கட்டுரைகள் அடங்கிய இந்த நூலின் விலை: ரூ. 40/-. தொகுப்பாசிரியர்: டாக்டர். எம். எஸ். வேங்கடராமன், சென்னை கிழக்கு அரிமா சங்க வெளியீடு. கிடைக்குமிடம் ஹிகின்பாதம்ஸ், சென்னை — 600 002.**

**இந்த நூலின் முதல் பதிப்பு மூலம் கிடைத்த ரூ. 60,000 ஏழைகளுக்காக அரிமா சங்கம் நடத்தும் மகப்பேறு மனையைக் கட்ட உதவியது என்பது குறிப்பிடத்தக்கது.)**



கமலக் கண்ணனுக்கு கட்சி டிக்கெட் மறுக்கப்பட்ட போது, பெண்கள் இவர் ஊரில் கண்ணீர் விட்டு அழுதனர். நூற்றுக் கணக்கான கழகத் தொண்டர்கள் இவர் வீட்டு முன் திரண்டு நின்று, எப்படியும் இவரை வெற்றி பெற வைப்பது என்று சபதம் செய்தனர்.

ஐந்து, பத்து என்று ஆளாளுக்குப் பணம் போட்டு வேட்புமனு தாக்கல் செய்தனர்.

இரவு பகல் பாராமல் ஒரு நூறு இளைஞர்கள் இவருக்காக உழைத்தனர். கலைஞர், எம். ஜி. ஆருக்கு இணையாக இவருக்கும் தொகுதி முழுவதும் 'கட்' அவுட்'கள் வைக்கப்பட்டன.

உழைப்புக்குக் கைமேல் பலன் கிடைத்தது.

# கமலக்கண்ணன் வாங்கிய மிட்டாய்!

பிப்ரவரி முதல் தேதியன்று கட்சி டிக்கட் கிடைக்காமல் அழுது கொண்டே அறிவாலயத்தை விட்டு வெளியே வந்தவர் மார்ச் முதல் தேதியன்று அதே அறிவாலயத்தில் 'ரத்தின கம்பள வரவேற்பு' அளிக்கப்பட்டார் என்றால் ஆச்சரியமாக இல்லை!

திருநள்ளாறு தொகுதியிலிருந்து சுயேட்சை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆர். கமலக்கண்ணன்தான் அந்தச் சிறப்புக்குரியவர்.

தமது அரசியல் வாழ்வைக் கல்லூரியில் படிக்கும்போதே துவக்கி விட்ட கமலக் கண்ணன் 1978ல் காரைக்கால் அறிஞர் அண்ணா கலைக் கல்லூரியின் மாணவர் பேரவைத் தலைவராகத் தி. மு. க. சார்பில் போட்டியிட்டுத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

புதுவை மாநிலத்தைத் தமிழ் நாட்டோடு இணைப்பதை எதிர்த்துத் தீக்குளிக்க முயன்று கைதானார்.

86ல் இந்தி ஆட்சி மொழி எதிர்ப்புப் போராட்டத்தில் 'சட்டம் கொளுத்தி' இரண்டு மாதம் சிறையிலிருந்தார்.

85 தேர்தலில் தி. மு. க. வேட்பாளராகப் போட்டியிட்டுச் சுயேச்சை வேட்பாளரிடம் தோற்றுப் போனார்.

எனினும், தொகுதி மக்களோடு நெருங்கிய தொடர்பு வைத்திருந்தார். காரைக்கால் மேற்குப் பகுதியின் தி. மு. க. செயலாளராகப் பதவி வகித்தார்.

28ந் தேதி இரவு ஒன்பது மணிக்கு இவர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக அறிவித்த போது கலைஞரே வியந்து போனாராம்.

புதுவையில் ஆட்சி அமைக்கும் திறவு கோல் கமலக் கண்ணன் கையில் என்று வானொலி செய்தி வாசித்த போது நாடே வியப்பில் ஆழ்ந்தது.

அறிவாலயத்தில் கலைஞரும் ஏனைய அமைச்சர்களும், தலைவர்களும் இவர் வருவதற்காகக் காத்திருந்தார்களாம்!

''என்கிட்டே மிட்டாய் கேட்டே, நான் வாங்கித் தரலேன்னதும் நீயே வாங்கிக் கிட்டே'' என்று கூறி கட்டியணைத்துக் கொண்டாராம் கலைஞர்!

காரைக் காலை அடுத்த அம்பகரத்தூர் கமலக் கண்ணனின் சொந்த ஊர். எளிய குடும்பத்தைச் சேர்ந்தவர். இவரது தந்தை ஒய்வு பெற்ற தலைமையாசிரியர்.

இரண்டு சகோதரர்களில் மூத்தவர் பிரான்சில் இருக்கிறார். இளையவர் சென்னையில் வக்கீல் தொழில் செய்கிறார்.

சகோதரிகள் இருவருக்கும் திருமணமாகி விட்டது.

முப்பத்து மூன்று வயதான பிறகும் தேர்தலில் வென்ற பிறகுதான் திருமணம் என்று வைராக்கியத்தோடு இருந்தார்.

இனிமேல் ஏது தடை?

— சேத்தூர் அன்பழகன்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: வி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...




WRITE PIN CODE IN ADDRESS

நானும் வீட்டிலிருந்த படியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன். எனவே பயிற்சிபற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் மேல்கண்ட முகவரிக்கு உடனே அனுப்பிவைக்கவும்.
இப்படிக்கு,
கந்தவேலு

To
விவேகானந்தா கல்வி நிலையம்
தபால் பெட்டி எண்: 4986
9. மேட்லிரோடு, தி. நகர்.
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

விவேகானந்தா கல்வி நிலையம்
9, மேட்லி ரோடு,
தி. நகர், சென்னை - 17.

NAGA

REGISTERED No. M 4392
Registered as a Newspaper in Sri Lanka

அறிமுகப்படுத்துகிறோம்

# விஸ்ப்பர்

புதிய விஸ்ப்பர் ட்ரை-வீவ் உறையுடன் கூடியது.

மற்றொரு நாப்கின்

**ட்ரை-வீவ் பிளாட்டிங் பேப்பர் சோதனை:**

1. ஒரு மேஜைக் கரண்டி அளவு நீர் மையை விஸ்ப்பர் மீதும், ஒரு மேஜைக் கரண்டி அளவை வேறு ஏதாவது நாப்கின் மீதும் விடவும்.
2. இரண்டின் மீதும் பிளாட்டிங் பேப்பரை வைக்கவும்.
3. விஸ்ப்பர் மீது வைக்கப்பட்ட தாள் மிக சுத்தமாகவும் மிக உலர்ந்ததாகவும் தோன்றும்.

## வேறு எந்த நாப்கினையும்விட மிக சுத்தமாகவும் மிக உலர்ந்ததாகவும் வைத்துக்கொள்கிறது

ஏனெனில், விஸ்ப்பரில் மட்டுமே 'ட்ரை-வீவ்' என்ற ஒப்பற்ற உறை உள்ளது. இந்த உறை, உங்களிடமிருந்து ஈரத்தை, நாப்கினின் உள்அடுக்கிற்குள் இழுத்துக் கொள்கிறது. ஆகவே அதன் மேற்புறம், எப்போதும் உலர்ந்ததாக இருக்கும், இப்போதுதான் நீங்கள் நாப்கினை மாற்றியது போலத்தோன்றும்.

விஸ்ப்பர், உங்கள் உள்ளாடைக்குள் கச்சிதமாகப் பொருந்திக் கொள்கிறது. நழுவாது, நகராது. காரணம், அதில், அதிக-விரிவான ஒட்டும்பட்டி உள்ளது. அது, நாப்கினை வசதியாக உரிய இடத்தில் வைத்துக் கொள்கிறது.

**விஸ்ப்பர் பற்றி ஏதாவது விளக்கம் தேவையா?**

எங்களிடம் ஒரு விசேஷ மிஸ் விஸ்ப்பர் ஸர்விஸ் உள்ளது. இது, விஸ்ப்பர் பற்றியோ பெண்ணின் சுகாதாரம் பற்றியோ உங்கள் கேள்விகள் மற்றும் சந்தேகங்களுக்கு விளக்கம் தரத் தயாராக உள்ளது.




தொடர்பு கொள்ளவும் இம் முகவரிக்கு:

Ms. Whisper® Service, P.O. Box No. 6276, Bombay 400 011.

**பாதுகாப்பின் மிக சுத்தமான மிக உலர்ந்ததான உணர்விற்கு - விஸ்ப்பர்.**

CLARION/B/PG/53/203 TAM